# செந்தமிழ்ச் செல்வி




## உள்ளுறை


பாமழைபொழிந்த மாகவி
பாரதியாரின் நூற்றாண்டு விழா கசுரு
பாரதியார் நூற்றாண்டு விழா
நிகழ்ச்சிகள் ககக
சூல்யானை உண்ட
பெருமூங்கில் முளை ககக
'ஜோடி' உ0க
ஆட்சிமொழித் துணுக்குகள்-5 உ0ச
கங்கைகொண்டான்
குடைவரைக் கோயில்கள் உ0
பாவாணர் பார்வையில்
நம் கழகம் உ0க
குறி கூறும் மகளிர் உகரு
தொல்காப்பியம் புள்ளிமயங்கியல் உகஅ
பாண்டித்துரைத்தேவர் பாடிய
காவடிச்சிந்து உசக
பாட்டன் பாட்டி—
முறைப் பெயர்கள் உஉ
டாக்டர் ம. பொ. சிவஞானம்
அவர்களின் பேருரை உஉ
பேராசிரியை கிருஷ்ண சஞ்சீவி
மறைவு உரு
செய்திகளும் குறிப்புகளும் உக
மதிப்புரை உஉ



சிலம்பு-ருசு] வள்ளுவர் ஆண்டு-உ0கஉ, மார்கழி Jan. '82 [பரல் - ரு

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---

## மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
## கழக ஆட்சியருக்குத்
## "தமிழ்ப் பேரவைச் செம்மல்"
## பட்டம் வழங்கலும் பாராட்டுதல்களும்

கழக ஆட்சியர், தாமரைச் செல்வர், உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கட்கும், குழந்தை எழுத்தாளர் சங்கத் தலைவர் திரு அழ வள்ளியப்பா அவர்கட்கும், மதுரை காமராசர் பல்கலைக் கழகம் 9-1-1982 இல் "தமிழ்ப் பேரவைச் செம்மல்" என்னும் பட்டம் வழங்கிச் சிறப்பித்தது. கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள் பொன்னாடை போர்த்திப் பொற் பதக்கம் வழங்கிச் சிறப்பித்தார்கள். விவசாயத் துறை அமைச்சர் மாண்புமிகு கா. காளிமுத்து அவர்கள் பாராட்டுரை வழங்கினார்கள். (விவரம் பின்னர் வெளிவரும்.)

ACC-No-38106

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ருசு | திருவள்ளுவர் ஆண்டு உ0கஉ, மார்கழி சனவரி 1982 | பரல் ரு |
|---|---|---|

## பாமழை பொழிந்த மாகவி பாரதியின் நூற்றாண்டு விழா

தம் பாட்டுத்திறத்தாலே இந்த வையகத்தைப் பாலித்திட வைத்த மகாகவி சுப்பிரமணிய பாரதியாரின் நூற்றாண்டு விழா தமிழகத்திலும் தமிழ் பயிலப் பெறும் வெளிநாடுகளிலும் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பெற்று வருகிறது. தமிழக அரசின் சார்பில் கவிஞர் பிறந்த ஊரான நெல்லைமாவட்டத்தைச் சார்ந்த கோவில்பட்டி நகரை யடுத்த எட்டயபுரம் எனும் சிற்றூரில் நாடு புகழும் வண்ணம் நல்ல வகையில் விழா எடுக்கப்பெற்றது. பரங்கியரின் கொடுமைக்குத் தப்பிப் பாரதியார் தஞ்சம்புகுந்து வாழ்ந்த பாண்டிச்சேரியிலும் அங்குள்ள அரசின் சார்பில் பெருவிழா



அமைக்கப்பெற்றிருந்தது. இலங்கையிலும் பாரதி நூற்றாண்டு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. இவைதவிர, கல்கத்தா போன்ற வெளிமாநிலங்களின் தலைநகர்களிலும் விழா நடத்தப் பெற்றுள்ளது. அமெரிக்கா, ருசியா போன்ற நாடுகளில் விழா நடத்த ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. தமிழ்க் கவிஞர்

ஒருவர்க்கு இவ்வாறு உலகெங்கணும் விழா எடுப்பது பெருமகிழ்ச்சிக்குரியதாகும்.

பார் முழுவதும் விழாவெடுக்கும் வகையில் பாரதியார் புரிந்த சாதனைகள் நினைவுகூரற்பாலன. அன்னியரின் ஆட்சியில் ஒடுங்கிக்கிடந்த நாட்டுமக்களைத் தம் கவிதைகளால் தூண்டி விடுதலைப் போராட்டத்தில் ஈடுபடச்செய்த விடுதலைக் கவிஞர் அவர்.

சாதிகளில்லையடி பாப்பா என்று சமுதாயத்தில் பின்னிக் கிடக்கும் சாதிக்கொடுமையைச் சாடிய சமதர்மக்கவிஞர் அவர்.

பாரத மணித்திருநாடு தன்னைப்பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா என்ற பிறந்த நாட்டைப் பெற்ற தாயாகப் போற்றிய புதுமைக் கவிஞர் அவர்.

யாமறிந்தமொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவது எங்குங் காணோம் என்று தமிழின்பெருமை பாடிய தமிழுணர்வுக் கவிஞர் அவர்.

தனி ஒருவனுக்குணவில்லையெனில் இச் சகத்தினை அழித்திடுவோம் என்று சூளுரைத்த சூளுரைக் கவிஞர் அவர்.

காதல் காதல் காதல், காதல் போயின் சாதல் சாதல் சாதல் என்று பாடிய காதற்சுவைக் கவிஞர் அவர்.

ஓம் சச்தி ஓம் சக்தி ஓம் என்று சக்தியின் புகழ் பாடிய பக்தி நெறிக் கவிஞர் அவர்.

இது பொறுப்பதில்லை தம்பி எரிதழல் கொண்டுவா கதிரை வைத்திழந்தான் அண்ணன் கையை எரித்திடுவோம் என்று ஆர்த்தெழுந்த எழுச்சிக் கவிஞர் அவர்.

பாரடியோ வானத்திற் புதுமையெல்லாம் என்று இயற்கையின் வண்ணத்தியல்புகளைப் பாடிய இயற்கைக் கவிஞர் அவர்.

மாதர்தம்மை இழிவுசெய்யும் மடமையைக் கொளுத்துவோம் என்று பாடிய பெண்விடுதலைக் கவிஞர் அவர்.

அச்சம்தவிர், ஆண்மை தவறேல் என்று புதிய ஆத்திசூடி அருளிய அறநெறிக் கவிஞர் அவர்.

ஓடிவிளையாடு பாப்பா எனப் பாப்பாப் பாட்டுப் பாடிய குழந்தைக் கவிஞர் அவர்.

செந்தமிழ் நாடெனும் போதினிலே இன்பத்தேன் வந்து பாயுது காதினிலே என்று பாடிய செந்தமிழ்த் தேனீ அவர்.

தமிழர்தம் நீடுதுயர் நீக்கப் பாடிவந்த நிலா. இருபதாம் நூற்றுண்டின் ஈடிலாக் கவிஞர் அவர்.

"நெஞ்சு பொறுக்குதில்லையே இந்த நிலைகெட்ட மனிதரை நினைந்து விட்டால்" என்று நம் நாட்டவரின் திருந்தா நிலை கண்டு வருந்திப் பாடிய நாட்டுநிலையறிந்த நல்ல கவிஞர் அவர்.

காக்கை குருவி எங்கள் சாதி என்று சிற்றுயிர்களிடம் கருணை காட்டிய கருணைமனக் கவிஞர் அவர்.

"ஆடுவோமே பள்ளுப் பாடுவாமே ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமென்று ஆடுவோமே" என்று அன்னியரிடம் அடிமைப்பட்டு வாழ்ந்த காலத்திலேயே ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டதாகப் பாடிய வருவதுரைத்த வரகவிஞர் அவர்.

"வெற்றியெட்டுத் திக்குமெட்டக் கொட்டுமுரசே" என்று பெருத சுதந்திரத்தைப் பெற்றுவிட்டதாகப் பாடி வெற்றி முழக்கம் செய்த வீரசுதந்திரக் கவிஞர் அவர்.

அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்ப தில்லையே உச்சிமீது வானிடிந்து வீழுகின்ற போதினும் அச்சமென்ப தில்லையே என்று பாடிய அஞ்சாநெஞ்சக் கவிஞர் அவர்.

உழவுக்குந் தொழிலுக்கும் வந்தனை செய்து வீணில் உண்டு களித்திருப்போரை நிந்தனை செய்த—உழைப்பின் உயர்வை உணர்ந்த உத்தமக் கவிஞர் அவர்.

'எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி என்றென்றும் வாழியவே' என்று மார்தட்டி உரிமை கொண்டாடித் தமிழை வாழ்த்திய தமிழ்வீரர் அவர்.

இத்தகைய மாபெரும் மக்கட் கவிஞர்க்கு நூற்றுண்டுவிழா சிறப்பாகக் கொண்டாட வேண்டுவது பொருத்தம். எதையும் காலத்தால் செய்யத் தெரியாத தமிழர்கள் இதனையாவது உரிய காலத்தில் உரியமுறையில் செய்து வருவதற்காக நாம் அவர்களைப் போற்றுவோம். பாராட்டுவோம். ஓங்குக பாரதி புகழ்!

———

# பாரதியார் நூற்றாண்டு விழா நிகழ்ச்சிகள்

பாரெல்லாம் தமிழ் பரவும் வகை காண விழைந்த பாட்டுக் கொரு புலவன் பாரதியின் நூற்றாண்டு விழா, கடந்த திசம்பர் 11ஆம் நாள் தொடங்கித் தமிழ் நாடெங்கும், தமிழர் வாழும் பிற மா நிலங்களிலும் மிகச் சீரும் சிறப்புமாக—எழுச்சியோடும் மகிழ்ச்சி யோடும் கொண்டாடப்பட்டது—கொண்டாடப்பட்டு வருகின் றது. அறிஞர் அண்ணா அவர்களால் மக்கட் கவிஞர் (Pepole's Poet) எனப் புகழ்ந்துரைக்கப்பட்ட பாரதியாருக்கு இங்ஙனம் பரவலாக விழா எடுக்கப்படுதல் சாலப் பொருத்த முடைத்தாகும். அவ்வகையில் தமிழ்நாட்டில் எட்டயபுரத்திலும், புதுவையிலும் இவ் விழாக்கள் மிகச் சிறப்பாக நடைபெற்றன.

## எட்டயபுரத்தில்

தமிழ் நாட்டரசினரால் எட்டய புரத்தில் திசம்பர் 11, 12, 13 ஆம் நாள்களில் இவ் விழா முப்பெரும் விழாவாக நடைபெற் றது. 11—12—81இல் நடைபெற்ற நூற்றாண்டு விழாவின் தொடக்க விழாவில் வேளாண்மைத் துறை அமைச்சர் மாண்புமிகு டாக்டர் கா. காளிமுத்து அவர்கள் அனைவரையும் வரவேற்று அரிய உரை நிகழ்த்தியபின், தமிழக முதல்வர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் தலைமை தாங்க ஆளுநர் மாண்பமை சாதிக் அலி அவர்கள் விழாவினைத் தொடக்கி வைத்து உரையாற்றினார். அவ்வுரையில், "நாட்டு விடுதலைப் போராட் டத்தில் பாரதியாருக்குப் பெரும் பங்கு உண்டு; அவர் இந்தியா வுக்கு மட்டும் உரிய கவிஞர் அன்று; உலகிற்கே உரியவர். அந்த அளவிற்கு, அவர் மனித சமுதாய முன்னேற்றத்திற்குரிய கவிதை களை உருவாக்கியுள்ளார்" என்ற கருத்தினை வெளியிட்டார்.

அடுத்து முதல்வர் ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் தமது தலைமையுரையில், பாரதியாரின் பொதுநிலைநோக்கம்பற்றியும், பெண்கள் முன்னேற்றத்தில் அவர் கொண்டிருந்த ஆர்வம்பற்றி யும், மக்கள் எக் கருத்தையும் வெளியிட அஞ்சியஞ்சி வாழ்ந்த அந் நாட்களில் பாரதியார் எதற்கும் அஞ்சாமலும் வெளிப்படை யாகவும், வருங்கால நிகழ்ச்சிகளை முன்னறிந்தும் கூறிய ஆற்றலை விளக்கிப் பேசினார்.

பாரதியாரின் திருவுருவச் சிலையினைத் திறந்து வைத்துப் பேசிய பஞ்சாப் முதல்வர் மாண்புமிகு தர்பாரா சிங் அவர்கள்,

பாரதியார் நூற்றுண்டு விழாவினைத் தங்களுடைய மாநிலத்திலு அரசின் சார்பில் மாநிலந் தழுவிய விழாவாகக் கொண்டாட விழைவதாகவும், பாரதியார் பாடல்களைப் பஞ்சாபி மொழியில் மொழிபெயர்க்கத் திட்டமிட்டிருப்பதாகவும் கூறினுர். அவர் மேலும் பேசுகையில், ஒரு மொழியின் இலக்கியம் பிற மொழிகளில் மொழிபெயர்க்கப்படுவதால், மொழிவேற்றுமையும், மொழி பற்றிய பூசல்களும் தீர வாய்ப்புண்டு என்றும் கூறினுர்.

12—12—81இல் நடைபெற்ற இவ் விழாவில், டாக்டர் ஔவை நடராசன் அவர்கள் அனைவரையும் வரவேற்றுப் பேசிய பின், தலைமைச் செயலர் உயர்திரு **கா. திரவியம், இ. ஆ. ப.** அவர்கள் தொடக்க உரை நிகழ்த்தவும், திரு வலம்புரி ஜான் அவர்கள் தலைமை தாங்கவும் அறிஞர் பலர் **இளைய பாரதம்** என்னுந் தலைப்பில் கருத்துரை வழங்கினர்.

அடுத்துக் **கவிஞர் சுரதா** அவர்கள் தலைமையில் கவியரங்கமும், மாண்புமிகு **புலமைப் பித்தன்** அவர்கள் தலைமையில் வழக்காடு மன்றமும் நடைபெற்றன. பின்னர்ப் பேராசிரியை அ. ரா. இந்திரா அவர்கள் தலைமையில் **'மகவிர் நோக்கில் பாரதி'** என்னும் பொருள் பற்றி அறிஞர் பலர் உரையாற்றினர்.

அன்று பிற்பகல் நிகழ்ச்சிகட்குத் **தவத்திரு குன்றக்குடி அடிகளார்** அவர்கள் தலைமை தாங்க—திரு மீ. ப. சோமசுந்தரம் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்த, நடுவணரசின் நிதியமைச்சர் மாண்புமிகு ஆர். வெங்கட்ராமன் அவர்கள் தொடக்கவுரை ஆற்றினுர். தமிழக நிதியமைச்சர் மாண்புமிகு டாக்டர் நாவலர் நெடுஞ் செழியன் அவர்கள் சிறப்புரை ஆற்றினுர். அறிஞர் பலர் கருத்துரை வழங்கினர்.

அன்றிரவு நடன அரங்கு, இசையரங்கு, நாடகம் முதலியன வும் நடைபெற்றன.

13—12—81இல் மாண்புமிகு அமைச்சர் காளிமுத்து அவர்கள் தலைமையில் **பாரதி ஆய்வரங்கம்** நடைபெற்றது. டாக்டர் மா. நன்னன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர். பேரறிஞர் அண்ணு தொழில்நுட்பப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர் வா. செ. குழந்தைசாமி அவர்கள் தொடக்கவுரை ஆற்றினர்.

அன்று பிற்பகல் சட்டமன்றப் பேரவைத் தலைவர் மாண்பு மிகு க. இராசாரம் அவர்கள் தலைமையில் பாரதிக்கு **'அரசியல் தலைவர்களின் அஞ்சலி'** நடைபெற்றது. அமைச்சர் மாண்புமிகு எஸ். என். இராசேந்திரன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்த— நடுவணரசின் வேளாண்மைத் துறை இணை அமைச்சர்

மாண்புமிகு ஆர். வி. சாமிநாதன் அவர்கள் தொடக்கவுரை ஆற்றினார். அரசியல் கட்சித் தலைவர்கள் பதினெழுவர் பாரதியாருக்கு அஞ்சலி செலுத்தினர்.

## புதுவையில்

புதுவை மாநிலத்திலும் பாரதியார் நூற்றாண்டுவிழா மிகச் சிறப்பாகவும் பயனுள்ள விழாவாகவும் நடைபெற்றுள்ளது குறிப்பிடத்தக்க செய்தியாகும். இதுபற்றிய குறிப்பொன்று முன் இதழில் வெளியிடப்பெற்றுள்ளது. ஈண்டு, அம் மாநில அரசு, இந்த விழாவினை நடத்தத் திட்டமிட்டிருக்கும் பாங்கு ஒரு சிறிது விளக்கப்படுகிறது:

புதுவையில் பாரதியார்ப்பற்றிய ஒலி, ஒளிக் காட்சியை நடத்துதல்; பாரதி மணிமண்டபம் கட்டுதல்; தக்கதோர் இடத்தில் பாரதியின் திருவுருவச் சிலையினை அமைத்தல்; சாலைகள் கூடு மிடங்கள், பூங்காக்கள் ஆகிய இடங்களில் கற்களைப் பொருத்தி, அவற்றில் பாரதியாரின் கருத்துக்களைப் பொறித்தல், பாரதியார் நடமாடிய குயில்தோப்பு, கடற்கரை, உப்பளத்திலுள்ள தேச முத்து மாரியம்மன் கோயில், பாரதியார் வாழ்ந்த இல்லம், அரசுப் பூங்கா ஆகிய இடங்களில் நினைவுச் சின்னங்கள் நிறுவுதல்; அரசு வெளியிடும் 1982ஆம் ஆண்டு நாட்காட்டி (Calendar) களில் பாரதியாரின் பொன்மொழிகளைப் பொறித்தல்; ஆண்டு முழுதும் பள்ளி, கல்லூரி மாணவர்களுக்குப் பாரதியார்பற்றிய கட்டுரை, கவிதை, பேச்சுப் போட்டிகள் நடத்துதல், தமிழில் சிறந்த காவியம் படைத்தலை ஊக்குவிக்கும் முறையில் தமிழ்ப் புலவர்களிடையே போட்டி நடத்திச் சிறந்தபடைப்புக்கு ஐயாயிரம் உருபா வழங்குதல் என்று சில புதிய திட்டங்களைப் புதுவை முதல்வர் மாண்புமிகு தெ. இராமச்சந்திரன் அவர்கள் அறிவித் துள்ளமை மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

---

## வேண்டும் அன்னாய்

எண்ணிய முடிதல் வேண்டும்
நல்லவே எண்ணல் வேண்டும்
திண்ணிய நெஞ்சம் வேண்டும்
தெளிந்தநல் லறிவு வேண்டும்
பண்ணிய பாவமெல்லாம்
பரிதிமுன் பனியே போல
நண்ணிய நின்மு னிங்கு
நசித்திடல் வேண்டு மன்னாய்

—மகாகவி பாரதியார்

# சூல் யானை உண்டபெரு மூங்கில்முளை

[பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

யானை காடுகளில் விரும்பித் தின்பது மூங்கிலாகும். இதைப் பற்றிச் சங்க நூல்கள் கூறியுள்ளன.

"..............................சோலை
முளைமேய் பெருங்களிறு வழங்கு மலை" —அகம். 148

"முளை வளர் முதல மூங்கில் முருக்கிக்
கிளையொடு மேய்ந்த கேழ்கிளர் யானை" —அகம். 218

"குவையுடைப் பசுங்கழை தின்ற கையவாய்ப்
பேதை யானை சுவைத்த
கூழை மூங்கிற் குவட்டிடை யதுவே" —குறுந்தொகை. 179

மேற்காட்டிய பாடல்களில் யானை மூங்கிலையும் அதன் முளையையும் தின்பதைக் கூறியுள்ளதைக் காணலாம்.

ஆனால் நற்றிணையில் மட்டும் ஒரு பாடலில் ஒரு புதிய செய்தி கூறப்பட்டுள்ளது.

"வழுவப் பிண்டம் நாப்பண் ஏமுற்று
இருவெதிர் ஈன்ற வேற்றிலைக் கொழுமுளை
சூன்முதிர் மடப்பிடி நாண்மேயல் ஆரும்
மலைகெழு நாடன் கேண்மை பலவின்" —நற்றிணை. 116

பெரிய மூங்கில் ஈன்ற கொழுமுளையைத் தின்றதால் பெண்யானையின் கருப்பம் அழிந்ததாகக் கூறப்பட்டுள்ளது. கருப்பம் வழுவியதாகக் கூறிய செய்தி ஆராய்தற்குரியது என்று கழகம் வெளியிட்ட எனது 'சங்க நூல்களில் விலங்கின விளக்கம்' என்ற நூலில் எழுதியிருந்தேன். ஆனால் இப்பொழுதுதான் நற்றிணை கூறும் செய்தி அரிய அறிவியற் செய்தியென்று தெரிந்துகொண்டேன். இயற்கையைப்பற்றி (Nature Study) இந்தியா முழுவதும் நன்கு ஆராய்ந்து சிறந்த நாளேடுகளில் கட்டுரைகள் எழுதிவரும் பேரறிஞர் எம். கிருஷ்ணன் Sunday Statesman (May 10, 1981) என்ற நாளேட்டில் இந்தச் செய்தியைக் குறிப்பிட்டுள்ளார்: (The herbivorous do not seem to revel in this verdant vegetative resurgence waiting a while before they graze or browse it, till the blades of the up-and-coming grasses are unfurled and the leaves are mature and have lost their tender translucency. Perhaps some irritant or poisonous principle in the new sprouts inhibits the animals-it is known that in bamboos and some grasses, the fresh growth is poisonous)

என்று ஒரு சிறந்த இயற்கைநூற் பேரறிஞர் கண்டுபிடித்துக் கூறிய ஒரு செய்தியை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஒரு சங்கப்புலவன் கண்டு கூறியது அறிவியல் இல்லையா? வியப்பைத் தரவில்லையா! மூங்கிலின் புதிய முளை, வறட்சிக் காலத்திற்குப்பின் மழை பெய்தவுடன் தோன்றும் முளை நஞ்சுடையது என்று அறிஞர் கிருஷ்ணன் கண்டறிந்து கூறியுள்ளார். இது மிக அரிய அறிவியல் செய்தி. இன்று கூறிய அந்தச் செய்தியையும் அன்று சங்கப்புலவன் ஒருவன் பாடிக்கூறிவிட்டானே! அறிஞர் கிருஷ்ணன் கூறிய செய்தியைத்தான் வறட்சிக் காலத்திற்குப் பிறகு மழைக் காலத்தில் தோன்றிய முளையை 'ஏற்றிலைக் கொழு முளை' (Spikes of grass) என்று சங்கப்புலவன் கூறினன். அறிஞர் கிருஷ்ணன் அவர்கள் 'இந்து' (Hindu) நாளிதழில் செங்கால் நாரையைப் பற்றி ஒரு கட்டுரை எழுதியிருந்தார். "நாராய் நாராய் செங்கால் நாராய் பழம்படு பனையின் கிழங்குபிளந் தன்ன" என்று சத்தி முத்தப்புலவர் பிற்காலத்தில் பாடிய பாட்டின் வரிகளில் கூறப் பட்ட இயற்கை அறிவியல் பொருத்தத்தையும், செங்கால் நாரை யின் அலகு பிளந்த படத்தையும், பழம்படுபனையின் கிழங்கு பிளந்த தோற்றத்தையும் நிழற்படம் பிடித்து ஒப்பிட்டு அஃது ஓர் ஒப்பற்ற உவமை என்று கூறியுள்ளார். இந்த உவமையின் உண்மையையும் பொருத்தத்தையும் சிறப்பையும் முன்னரே நான் நேரில் உணர்ந்தேன். ஆனல் படங்கள் கிடைக்கவில்லை. இவ் வளவு சிறந்த தமிழ் அறிஞன் காடுகளிலெல்லாம் சென்று இயற் கையில் விலங்குகள், பறவைகள், ஊர்வன மற்றும் பல உயிரிகளை ஆராய்ந்து, உள்ளதை உள்ளவாறே அறிவியல் கண்ணேட்டத் துடன் எழுதிய செய்திகள் சங்கநூல் செய்திகளுடன் ஒத்து இருப்பது மிக அரியதாகும்.

இருவெதிர் என்பது பெருமூங்கிலாகும். இதை (Bambusa Arundinanceae) என்று அறிவியலில் அழைப்பர். வெதிர் என்ற சொல் சங்க நூல்களில் பெருமூங்கிலையும் பெரிய துளையுடைய மூங்கிலையும் குறித்ததாகும். பெண் யானை மூங்கிலின் இள முளையைத் தின்று கருப்பம் வழுவிய செய்தி அரிய அறிவியல் இயற்கைச் செய்தியாகும். இவ்வாருகச் சங்க நூல்களில் காணும் அறிவியல் இயற்கைச் செய்திகளை (Scientific Nature study) ஆராய்ந்து வெளிப்படுத்துவது தமிழர்களின் கடமையாகும். தமிழையும், அறிவியலையும் இணைத்துத்தான் தமிழ்மொழியை வளர்க்கவேண்டும். இல்லாவிட்டால் பாரதியின் பாட்டுப்படி 'மெல்லத் தமிழ் இனிச் சாகும்'. ஆதலின் அறிவியல் தமிழைக் காப்பாற்றுவோம், போற்றுவோம்.

———

# 'ஜோடி'

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

இரண்டு என்பதைக் குறிக்க இரட்டு, இரட்டை, இணை, துணை, பிணை முதலிய இனிய தமிழ்ச்சொற்கள், இலக்கிய வழக்கு உலகியல் வழக்கு ஆகிய இருவகை வழக்குகளிலும் பயில வழங்குகின்றன. இவற்றோடு 'சோடி' என்னுமொரு சொல்லும் பெருக வழங்குகிறது. இதனை, 'ஜோடி' என்று எழுதுவதும் சொல்வதும் அழுத்தமாக உள்ளது. 'ஜோடி' என்று எழுதாமல் 'சோடி' என்று எழுதினால் 'வடமொழி வெறுப்பர்' என்று சொல்வாரும் உளர். அச் சொல்லின் உண்மைப் பிறப்பு உறுதிப்பட்டால் அன்றித் தமிழரும் ஏற்றுக்கொள்ளார். ஏனெனில், அவர்களுள் பலரும் 'ஜோடி'யைத்தானே 'ஜோடி'த்து மகிழ்கிறார்கள்!

பழங்காலத்தில் எழுது பொருளாக ஓலை இருந்ததென்பது வெளிப்படை. ஓலையொடு 'ஏடு' என்பதும் அதற்கொரு பெயர். புல்வகை உறுப்புகளைச் சொல்ல வந்த ஆசிரியர் தொல்காப்பியனார்,

''தோடே மடலே ஓலை என்றா
ஏடே இதழே பாளை என்றா
ஈர்க்கே குலையென நேர்ந்தன பிறவும்
புல்லொடும் வருமெனச் சொல்லினர் புலவர்''

என்று அவர்க்கு முந்தைப் புலவர் வழங்கிய மரபினைக் குறிப்பிடுகிறார்.

ஏட்டில் எழுதுவார் தம் விருப்புக்கு ஏற்ற அளவில் நெடிய ஓலையில் ஓர் ஒழுங்குற முறித்தோ, நறுக்கியோ, கிள்ளியோ ஏடு எடுப்பர். ஆகலின் ஏடு, 'முறி' என்றும், 'நறுக்கு' என்றும், 'கிள்ளாக்கு' என்றும் பெயர் பெற்றது. ஓர் ஏட்டிலேயே ஒருவர் எடுத்துக்கொண்ட நூல் முற்றுப் பெறுவதில்லை. ஆதலால், பல ஏடுகளை ஓரளவில் எடுத்துத் தொகுக்க வேண்டியதாயிற்று. ஓர் ஏட்டுடன் ஒப்பிட்டு ஓரளவில் எடுப்பதைச் 'சுவடி சேர்த்தல்' என்பது வழக்கு. ஒன்றோடு ஒன்றை, ஒப்பான அளவாக்கி நறுக்கிச் சேர்ப்பதால், இரண்டைச் 'சுவடி' என்னும் வழக்கம் ஏற்பட்டது. சுவடி என்னும் சொல் தோன்றிய வரலாறு இது. சுவடி என்பதற்கு இணை, இரண்டு, இரட்டை என்பதே பொருளாம்.

உருவமும் பருவமும் ஒத்த இரண்டு பிள்ளைகளைச் 'சுவடிப் பிள்ளைகள்' என்பதும், ஒன்றோடு ஒன்று ஒப்பிட்டு இணை சேர்க்கும்

காளைகளைச் 'சுவடிக் காளைகள்' என்பதும் நாடறிந்த செய்தியே. இச் சுவடிகள் இணைப்பொருள் தருவனவேயாம்.

'நாட்டுக்கு நாட்டு மட்டம்—நாமிரண்டும் சோடி மட்டம்' என்பதொரு நாட்டுப் புறப் பாட்டு! இவ்வாறு இரண்டு என்னும் பொருள்தரும் சுவடியாம் சோடி 'ஒரு சோடி செருப்பு', 'ஒரு சோடி வேட்டி' எனப் பேச்சு வழக்கிலும் வழங்குகின்றது. சுவடியில் இருந்து பிறந்தது சுவடு என்னும் சொல். எப்படி?

இரண்டு கால்கள் நிலத்தில் படியும்—பதியும்—படிவை அல்லது பதிவைச், 'சுவடு' என்பது இலக்கிய வழக்கு. பிரிவு மேற்கொண்ட தலைவியைப், பரிவு மேற்கொண்ட செவிலித் தாய் தேடி வரும்போது, 'சுவடு கண்டு இரங்கல்' என்பதொரு துறையில் புலவர்கள் பாட்டியற்றல் அகப்பொருள் இலக்கணச் செய்தி. 'சுவடு கண்டு' என்பது, 'தலைவியின் கால் தடம் கண்டு' என்னும் பொருள் தருவதாம்.

> "மாதர் பிறைக்கண்ணியானை மலையான் மகளோடும் பாடிப்
> போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவார் அவர்பின் புகுவேன்
> யாதும் சுவடு படாமல் ஐயா றடைகின்ற போது"

என்பது அப்பரடிகள் வாக்கு (4 : 3 : 1). இதில், 'சுவடு' கால் தடத்தைக் குறிக்கின்றது.

கால் தடத்தைக் குறிக்கும் 'சுவடு' குதிரையில் ஏறுதற்குக் கால் வைக்கும் 'அங்க வடி'யையும் குறிக்கலாயிற்று. மயிலேறி விளையாடும் மகிழ்முருகனுக்குக் குதிரை, மயில் தானே! அம் மயிலேறும் 'பக்கரை'யையும் சுவடாகக் கொண்டனர். அதனால் அகரவரிசையாளர், சுவட்டுக்கு அங்கவடி, பக்கரைகளையும் இணைத்தனர்.

இனிச், சுவடி 'சோடி'யானது போலச், சுவடு 'சோடு' ஆகியது. "காலுக்குச் சோடில்லை" என்பது புலவர் ஒருவரின் பெருங்கவலை. "சோட்டால் அடிப்பேன்" என்பது சினத்தான் செருக்குரை.

ஒப்பிணைப் பொருளாம் சுவடியில் இருந்து, சுவடித்தல், சுவடிப்பு, சுவடணை என்னும் தொழிற்பெயர்கள் பிறந்தன. தேர், பல்லக்கு, அரங்கம், ஆட்டக்களம், மன்றம், மாளிகை முதலியன அழகுறுத்தப்பெறும்போது, இப்பாலும் அப்பாலும் ஒப்பு நோக்கி, இணை இணையாய்ச் செய்தலுடைமையால் அவ் வழகுறுத்தும் கலைச் செயல் இப் பெயர்களைப் பெற்றது. இவையே பின்னர்ச் சோடித்தல், சோடிப்பு, சோடணை என்றாயிற்று. இவற்றையும் வடமொழித் தாக்கர் விடுவரா? ஜோடித்தல், ஜோடிப்பு, ஜோடணையாக்கி மகிழ்ந்தனர்.

ஒப்பிணைப் பொருளால் வளர்ந்த 'சுவடு' இருபதிவாம் தடங்களைக் குறித்ததில் இருந்து வளர்ந்தது. நடந்தும் ஓடியும் அழுந்தித் தடம் பட்டுப்போன வழியையும், பெருவழியையும் குறிக்கலாயிற்று.

"தேரின் சுவடு நோக்குவர்"

என்று குறிக்கும் கம்பர் (அயோ. தை. 82)

"மண்ணின் மேலவன் தேர்சென்ற சுவடெலாம் மாய்த்தா
விண்ணின் ஓங்கியது"

என்று முடித்தார். (ஆரண். சடா. 165).

மண்ணின் தடத்தை விடுத்து விண்ணின் தடத்துக்கும் எழும்பினார் ஆளுடைய அரசர்.

"அண்டங் கடந்த சுவடும் உண்டோ
அனலங்கை ஏந்திய ஆடலுண்டோ?"

என்பது அவர் வாக்கு (தேவா. 6 : 97 : 1). இவண் 'சுவடு' அடையாளப் பொருட்டது.

'சுவடு' தன் பொருளில் மேலும் வளர்ந்தது; நீர் ஒழுகும் தடம், புண், தழும்பு இவற்றையும் குறிப்பதாயிற்று. யானையின் மதம்பாய் தடம் 'மதம் பாய் சுவடு' என்றும் 'யானைச் சுவடு' என்றும் வழங்கலாயிற்று. குருதி கொட்டிய தடத்தைச் 'செம்புனற் சுவடு நோக்கி இது நெறி' என்று சுட்டுகிறார் கம்பர் (உயுத். மகரக். 29). ஏனைய புண்ணும் தழும்பும் வெளிப்படை.

அழுந்திய தடத்தில் இருந்து சுவடு, 'அழுந்திய மரபு' சுட்டும் சொல்லாகவும் கொங்கு வேளிரால் கொண்டாடப் பெறுவதாயிற்று.

"சொல்லினன் வினவும் சுவடுதனக் கின்மையின்"

என்றார் அவர் (பெருங். உஞ். 34 : 79). இங்குச் சுவடு 'மரபு' அல்லது அடிப்பட்ட வழக்கினைக் குறிக்கிறது. வழித் தடத்தில் இருந்து வாழ்வுத் தடத்துக்கு வந்த வழி இது.

சுவடி, சுவடு என்னும் தனித் தமிழ்ச் சொற்களின் வழிவந்த சோடி, சோடு, சோடித்தல், சோடிப்பு, சோடணை என்னுஞ் சொற்களை, இனியேனும் ஜோடி, ஜோடு, ஜோடித்தல், ஜோடிப்பு, ஜோடணை என வேற்றெழுத்தால் எழுதும் இழிவினைத் தமிழர் ஒழிப்பாராக! எழுத்து ஏமாற்றம் என்றும் நிலைக்காது என்றும், என்றேனும் உண்மை ஆய்வால் வெளிப்பட்டே தீரும் என்றும், அறிஞர்கள் ஆய்ந்து தெளிவுறுத்துவார்களாக!

———

# ஆட்சிமொழித் துணுக்குகள்

[தமிழ்த் தொண்டர் கோ. முத்துப்பிள்ளை]

## 5. BRIEF CASE

என் பெயருக்குத் தலைப்பு எழுத்தாக இருப்பது "கோ' என்னும் எழுத்தாகும். இந்த ஓர் எழுத்து மட்டுமே ஒரு சொல்லாகும் என்பதை எண்ணும்போது எத்துணை மகிழ்ச்சியாக இருக்கின்றது. "கோ" என்னும் சொல்லின் பொருளை ஈண்டு விரித்துரைத்தால், அது தற்பெருமையின்பாற்படுமாகையால், அதனைக் குறிக்காது விடுகின்றேன்! இதைப் போன்று ஓரெழுத்தால் ஆகிய சொற்கள் தமிழ்மொழியில் எத்தனை இருக்கின்றன என்று எண்ணிப்பார்த்தால், வியப்பாகவும் மகிழ்ச்சியாகவும் இருக்கும். உயிரெழுத்துக்களை மட்டும் எடுத்துக்கொண்டால், ஏறக்குறைய அவை எல்லாமே ஓரெழுத்து ஒருமொழியின் பாற்படும் என்று தெரிந்துகொள்ளலாம். தமிழின் பெருமைக்கு இஃது ஓர் எடுத்துக்காட்டாகும்.

கையில் பையை எடுத்துச்செல்கின்றோம். "கை"யும் ஓரெழுத்து, "பை"யும் ஓரெழுத்து. இன்று, இந்தப் புதுமைக் காலத்திலே, வகை வகையான பைகள் வந்து குவிகின்றன. அவற்றின் பெயர்களையெல்லாம் தொகுத்து, தமிழ்ப்படுத்திப் பார்த்தால், அஃது ஓர் அரிய ஆராய்ச்சியாகத் திகழும் என்பதில் ஐயமில்லை! எனினும் பைகளை மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். துணிப் பையும் தோல் பையும் முதலிரண்டு வகைகளாகும். மூன்றாவது வகைதான் Brief case. இது பையன்றே என்று உடனே சொல்லத் தோன்றும். ஆயினும் இஃது ஆற்றும் பணியைக் கருதிப்பார்த்தால், பையின் வகையிலே இதைத் தயக்கமின்றிச் சேர்த்துவிடலாம்.

ஓரிடத்தில் ஒரு மாநாடு நடைபெற்றது. துணிப் பையுடன் வந்தவர்களை ஏவலர்கள் எட்டியே நிறுத்திவிட்டார்கள்! தோற்பையுடன் காட்சி தந்தவர்களை நுழைவாயிலிலே தடுத்துவிட்டார்கள்! Brief case ஏந்தி வீரநடை போட்டு வந்தோரையெல்லாம் "வருக, வருக" என்று வாயார வரவேற்று, இருக்கைகள் இருக்கும் இடம் வரையில் இட்டுச்சென்றனர்!

கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவர்கின்ற உயர் பொருள் Brief caseதான் என்பது விளங்கிவிட்டதன்றோ?

Box என்னும் ஆங்கிலச் சொல்லிற்கு ஈடாகப் "பெட்டி" என்னும் தமிழ்ச் சொல்லைப் பயன்படுத்திவருகின்றோம். Case என்னும் சொல்லிற்குப் பல்வேறு பொருள்கள் இருப்பினும், அவற்றுள் "பெட்டி" என்னும் பொருளும் உண்டு என்பதை நாம் அறிந்துள்ளோம். "பெட்டி" என்பது மிக நல்ல தமிழ்ச் சொல். இதை மேலும் அழகுபடுத்திப் "பெட்டகம்" என்று சொல்லும் வழக்கமும் உண்டு. இலக்கிய உலகிலே "பேழை" என்னும் சொல்லை எடுத்தாளுகின்றோம். உயர்ந்த பொருள்களைப் பொதிந்துவைக்கும் பெட்டியைப் "பேழை" என்று பெருமைப் படுத்துகின்றோம். நகைப் பெட்டியை "நகைப் பேழை" என்று சொல்லும்போது நம்முடைய அகமும் முகமும் மலர்கின்றன. "இலக்கிய உலகிலே" என்று குறிப்பிட்டேன். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் "இலக்கியப் பேழைகளை" உருவாக்கி நாட்டில் உலவவிட்டிருப்பதை நாம் அறிவோம். உயர்ந்த நூல்களின் தொகுப்பு அடங்கிய பெட்டிக்குப் "பேழை" என்னும் எழில்மிகு பெயரை அவர்கள் அமைத்துக்காட்டியுள்ளனர்.

Brief என்னும் சொல்லுக்குப் பல்வேறு பொருள்கள் இருப்பதை அகராதிகளில் காணலாம். அவற்றுள், வழக்கறிஞர்களால் பயன்படுத்தப்படும் வழக்குக் கட்டு என்பதும் ஒரு பொருளாகும். வழக்குக் கட்டுகள் வைக்கப்பெறும்போது அந்தப் பெட்டியை Brief case என்னும் பெயரால் குறிப்பிடுகின்றோம்.

எனினும் Brief case ஒரு பொதுப்பெயராக அமையும்போது, ஆங்கில அகராதி தருகின்ற ஒரே பொருள் small leather hand bag என்பதாகும். இதனைத் தமிழில் "சிறிய தோல் கைப் பை" என்று சொல்லலாம். இக் காலத்தில் புதிது புதிதாக வரும் Brief caseகளைப் பார்த்தால், அவை தோலால் செய்யப்பெற்றன வாகவும் இல்லை, "பை" என்று சொல்லும் நிலையிலும் இல்லை. Brief case என்பதற்குச் "சிறிய பெட்டி" என்பதுதான் நேரான, இயல்பான பொருளாகும்.

"சிறிய பெட்டி" என்னும் இந்தப் பெயரைச் சிறிது நேரம் சிந்தையில் தேக்கி வைத்துக்கொள்வோம். .....

Trunk என்பது பெரிய பெட்டி. Suit case (உடைப் பெட்டி) அதைவிடச் சிறியது, Brief case மேலும் சிறிய பெட்டி அல்லது கைப் பெட்டி.

புறநானூற்றுக் காவல பாவலன், பாண்டியன் அறிவுடை நம்பி, தீட்டியுள்ள பொன்னோவியம் ஒன்றை ஈண்டு நினைவு கூர்வோம் :

"படைப்புப்பல படைத்துப் பலரோடு உண்ணும்
உடைப்பெருஞ் செல்வர் ஆயினும், இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும், தொட்டும், கவ்வியும், துழந்தும்,
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்,
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம்வாழும் நாளே."

இஃது எல்லார்க்கும் தெரிந்த எழிலோவியம். மழலையரின் தவர்நடையையும் மகிழ்வூட்டும் செயல்களையும் எடுத்தியம்பி மயங்குகின்றான் இந்தப் பாவலன். சிறுவர்களின் சிறிய நடையைக் "குறு நடை" என்று குறிக்கின்றது இந்தப் பாட்டு.

ஒரு சில சொற்களை உன்னிப்பாய்ப் பார்ப்போம். "குறுமை" என்னும் சொல் "குறுகிய தன்மை" என்று பொருள்படுகின்றது. குறுநகை, குறுஞ்சிரிப்பு, குறுங்காடு, குறுந்திரட்டு, குறுந்தொடி, குறுங்கண், குறுமுனி, குறுநொய் (குறுணை) என்று அடுக்கிக் கொண்டே போகலாம். குற்றாலத்தில் எழுந்தருளியிருக்கும் ஈசனைக் "குறும்பலா ஈசர்" என்றுதானே போற்றுகின்றோம்.

சிறிய பெட்டியை, அது பயன்படும் பெருமை நோக்கி, "குறும் பேழை" என்று கூறலாமே.

Brief case = குறும் பேழை.

———

## கவலை

நாம் நடந்து செல்லும் ஒரு வழியிலிருந்து மற்றொரு வழி பிரிந்து செல்லுமானால் அதனைக் 'கவலை வழி' என்று சொல்வார்கள். அதுபோலவே இங்கே எதனையும் பிரித்துப் பிரித்து ஆராயும் பகுத்துணர்வே 'கவலை' எனப்பட்டது.

...... ...... ......

மாந்தர்கள் கவலையோடு உயிர் வாழ்கிறார்கள் என்றால் பகுத்துணர்வோடு முயற்சியாய் வாழ்கிறார்கள் என்பதும் மற்ற உயிர்கள் பகுத்துணர்வு இன்றி வாளா வாழ்வதால் கவலை இன்றி வாழ்கின்றன என்றும் தெரியப்படும்.

—தவத்திரு அழகரடிகள்

# கங்கைகொண்டான் குடைவரைக்கோயில்கள்

[தி. இராசமாணிக்கம், பி.ஏ., பி காம்., விசாரத்,

கூட்டுறவுச் சங்கங்களின் இணைப்பதிவாளர்,
26, இராமகிருஷ்ண சாலை, சேலம்-7]

பூர்வதேசமும் கங்கையும் கடாரமுங்கொண்ட முதல் இராசேந்திர சோழன் பெயரால் அழைக்கப்பெறுவது கங்கைகொண்டான். அதினின்றும் பாண்டியப் பேரரசனான சீமாறன் பரசக்கரகோலாகலன் சீவல்லவன் பெயரைக் கொண்டதும் தென் திருமாலிருஞ் சோலை எனப்பெறுவதுமான சீவலப்பேரி செல்லும் வழியில் கங்கைகொண்டான் இரயில் நிலையம் உள்ளது. அங்கிருந்து 1 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள பாறையின் சரிவில் வடக்கு நோக்கி இரண்டு குடைவரைக் கோயில்கள் உருவாக்கப் பட்டுள்ளன. மேற்புறமாக உள்ள குடைவரை செதுக்க முற்பட்ட நிலையில் முற்றுப்பெறாமல் உள்ளது.

கீழ்ப்புறமாக உள்ள குடைவரைக்கோயில் நெல்லை மாவட்டத்திலுள்ள ஏனைய குடைவரைக் கோயில்களைப்போன்று பருமனான தூண்கள், அரைத்தூண்களுடன் கூடிய முகப்புக் கொண்ட மண்டபத்தைக் கொண்டதாக இல்லை. கருவறை மட்டுமே உள்ளது. கருவறையின் உள்ளே ஏனைய பாண்டிய குடைவரைக் கோயில்களைப் போன்று இலிங்கத்திருவுரு பாறையிலேயே செதுக்கப்பட்டுள்ளது. ஆனால் அஃது உடைந்துவிட்டது. கருவறையின் இருபுறமும் இரு புரைகள் காணப்படுகின்றன. கீழ்ப் புறமாக உள்ள புரையினை ஒட்டி இரு புதைசிற்பங்கள் உருவாக் கப்பட்டுள்ளன.

திருமலாபுரம், வீரசிகாமணி ஆகிய இடங்களில் உள்ளது போன்று இங்கும் விநாயகர் வடிவம் அமைக்கப்பட்டுள்ளது. இவர் யோகாசனத்தில் உட்கார்ந்த நிலையில் உள்ளார். வலக் கையில் பாசம் உருவாக்கப்பட்டுள்ளது. ஏனையவை தெளிவாகத் தெரியவில்லை. பாண்டிய நாட்டில் பிள்ளையார் வழிபாடு மக்களிடையே நன்கு பரவி இருந்தமையினையே இஃது உறுதிப் படுத்துகிறது.

விநாயகருக்குக் கீழ்ப்புறமாக சேஷ்டாதேவி இரு கைகளுடன் உட்கார்ந்த நிலையில் உருவாக்கப்பட்டுள்ளாள். காதுகள் இரண்டும் நீண்டு காணப்படுகின்றன. அவளுக்கு இரு புறமும் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. ஆனால் அவை தெளிவாக இல்லை. ஆகம விதிகளின்படி சேஷ்டாதேவிக்கு வலப்புறம் நந்தியின் தலையுடன் கூடிய மகனும், இடப்புறம் அக்னிமாதா எனப்படும் மகளும் இருக்கவேண்டும். நெல்லை மாவட்டத்தில் இங்குள்ள குடைவரையில் மட்டுமே சேஷ்டாதேவி வடிவம் உருவாக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இவ் வடிவம் இம் மாவட்டத்தில் வேறு எந்த குடைவரைக் கோயிலிலும் இல்லை.

தமிழகத்தில் முற்காலத்தில் சேஷ்டாதேவி வழிபாடு பரவி இருந்தது. இங்கு மட்டுமன்றித் திருப்பரங்குன்றத்தில் உள்ள குடைவரைக் கோயிலில் 8 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சடாவர்மன் பராந்தகப் பாண்டியன் காலத்திய சேஷ்டாதேவி வடிவம் உள்ளது. தமிழ் நிகண்டில் சேஷ்டாதேவி முகடி, மூதேவி என்றெல்லாம் குறிப்பிடப்படுகிறாள். மாமன்னன் இராசராசன் காலம் வரை கருவறையைச் சுற்றி அட்ட பரிவார தேவதைகளுக்குச் சிற்றாலயங்கள் அமைக்கப்பட்டன. அவற்றிலே ஒன்று சேஷ்டா தேவிக்கு என்பதை நோக்கும்போது சேஷ்டாதேவி வழிபாடு தமிழகத்தில் எவ்வாறு பரவி இருந்தது என்பது தெளிவாகிறது. இதைப் பன்னிரு ஆழ்வார்களில் ஒருவராகிய தொண்டரடிப்பொடி ஆழ்வார்,

'நாட்டினான் தெய்வ மெங்கும் நல்லதோ ரருள்தன் னாலே
காட்டினான் திருவ ரங்கம் உய்பவர்க் குய்யும் வண்ணம்
கேட்டீரே நம்பி மீர்காள் கெருடவா கனனும் நிற்க
சேட்டைதன் மடிய கத்துச் செல்வம்பார்த் திருக்கின் றீரே''

எனக் கடிந்து கொள்கிறார். என்ன காரணத்தாலோ சேஷ்டா தேவி வழிபாடு மறைந்துவிட்டது.

கருவறை மட்டும் உள்ள குடைவரைக்கோயில்கள் மகேந்திர வர்மன் பாணியில் அமைந்துள்ளனவாகத் திரு. கே. ஆர். சீனிவாசன் தம் ''பல்லவர்கள் குடைவரைக் கோயில்கள்'' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். எனவே இந்தக் குடைவரையை மகேந்திரவர்மன் பாணியில் உள்ளதாகக் கருதலாம். இதன் காலத்தை 7—8ஆம் நூற்றாண்டாகக் கொள்ளலாம்.

———

# "பாவாணர் பார்வையில் நம் கழகம்"

[வேலூர் ம. நாராயணன், எம். ஏ.]

"இந்தக் காலத்திலே தமிழை வளர்ப்பதென்றால் மிக மிக எளிது: கழக நூல்களை வைத்துக்கொண்டால் தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செய்யக் கூடிய ஆற்றல் தானாகவே வந்துவிடும். கழகம் எதிர் நீச்சலில் வளர்ந்தது. தமிழுக்குத் தமிழர்களே தடையாக இருந்த காலம் ஒன்று உண்டு. அந்தக் காலத்தில் கழகத்தை வளர்த்தவர் நம் தாமரைச் செல்வர் அவர்கள். கழகம் பல ஆசிரியர்களை உருவாக்கி இருக்கிறது. இஃது ஓர் 'இலக்கியப் பட்டறை' என்று சொன்னால் அது மிகப் பொருந்தும். கழகம் செய்கின்ற தொண்டு பயனுள்ள நிலையான தொண்டு," —இக் கருத்துரை புலவர் தணிகை உலகநாதன் அவர்களால் நம் திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்கு வழங்கப்பெற்ற புகழுரைகளாகும். —(செந்தமிழ்ச் செல்வி. சிலம்பு ரு - பரல் ச. பக். உஉஅ.,)

இன்னோரன்ன ஆன்றோர்களாலும், சான்றோர்களாலும் போற்றிப் பாராட்டப்பெறுகின்ற நம் கழகம் இன்று மணிவிழாக் கொண்டாடி மகிழ்கின்றது. கடந்த ஆண்டு வரை நம்மிடையே வாழ்ந்து பைந்தமிழ் காத்த மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் இந்த நன்னேரத்தில் 'உடம்போடில்லையே' என்ற ஏக்கம் நம் அனைவர்க்கும் அரும்புவது இயல்பே. எனினும், பாவாணர் தமது ஒவ்வொரு படைப்பிலும், ஒல்லும் வகையெல்லாம் நம் கழகத்தையும், கழகத்தின் செம்மல்களையும் போற்றிப் பாராட்டியிருப்பதை ஆராய்கையில் ஆறுதலாகவும், அறிவுக்கு விருந்தாகவும் உள்ளது.

நம் கழகம் தொடங்கப்பெற்ற ஆண்டு 1920: 'வாழும் நாடு ஆங்கிலேயர்க்கு அடிமை; வாழ்ந்த இனமோ ஆரியத்திற்குக் கொத்தடிமை' என்ற அவல நிலை. இத்தகைய தடைக்கற்களையெல்லாம், அடித்து நொறுக்கித் தூள் தூளாக்கி, எத்துணையோ எதிர்ப்புக் கடலினை எதிர்நீச்சலிட்டுக் கடந்து இன்று மணிவிழாக் கண்டுகொண்டிருக்கின்றது; இன்னமும் பல நூற்றாண்டுகள் வாழ்வாங்கு வாழக்கூடிய உயிர்ப்பாற்றலையும் பெற்றிருக்கின்றது.

நம் கழகம் மிகப் பெரிய எழில் நிறைந்த ஆயிரங்கால் மண்டபம்; எத்துணையோ புரவலர்களும், புலவர்களும் இதற்குத் தூண்களாக விளங்கினர் - விளங்குகின்றனர். இந்த ஆயிரங்கால்

மண்டபத்தின் மைய மண்டபத்தில் ஒளி வெள்ளம் பாய்ச்சும் ஒளி விளக்காகத் திகழ்ந்துகொண்டிருப்பவர் நம் கழக ஆட்சியாளர், தாமரைச் செல்வர் திருமிகு. வ. சுப்பையாபிள்ளை ஆவார்கள். ஏறத்தாழ ஒரு முழு நூற்றாண்டிற்குரிய தமிழக இலக்கிய—அரசியல்—கலை—மொழி—சமுதாயத்தின் வன்மை மென்மைகளை, மேடு பள்ளங்களை நேரில் கண்டறிந்த பெற்றியரென்னும் பேறு பெற்றவர் இவர்.

நம் கழகம் உருவாவதற்கான கருவினை அமைத்தவர் தனித் தமிழ்த் தந்தை **மறைமலையடிகள்** ; அந்தக் கருவினைக் கழகக் குழந்தையாக்கிப் பெற்றெடுத்துப், பேணிக் காத்துப், போற்றி வளர்த்தவர்கள் **திருவரங்கம் பிள்ளையும்**, அவர் தம் இளவல் **திரு. வ. சுப்பையா பிள்ளையு**மாவர். பாவாணர் பார்வையில் இம் முப் பெரும் தமிழறிஞர்களும் எந்த அளவிற்கு உயர்ந்த வைரங்களாக ஒளிர்கின்றனர் என்பதை இவண் ஆய்வோம்.

பாவாணர், தமது தமிழிலக்கிய வரலாற்றில் ஏனைய வரலாற்றாசிரியர்கள் சொல்ல மறந்த—மறைத்த—மறுத்த தமிழறிஞர் பலரை மனந் திறந்து பாராட்டுகின்றார் ; எனினும் அவர் நம் மறைமலையடிகளாரைப்பற்றியும், திருவரங்கம் பிள்ளை பற்றியும் கூறுவது வியப்பையும் மகிழ்வையும் ஒருங்கே அளிக்கின்றது :

"பொதுத் தமிழிலக்கிய மனைத்தும் பொருந்தக் கற்று, ஆங்கிலரும் வியக்கும் அழகிய ஆங்கில நடை கைவரப்பெற்று, ஆரிய மறைகளையும் ஆழ்ந்து ஆராய்தலுற்றுக், கடந்த மூவாயிரம் ஆண்டாக மறைந்து கிடந்த தனித் தமிழை மீட்டு, எப்பொருள் பற்றியும் செந்தமிழில் எழுத வொண்ணும் என்னும் உண்மையை நாட்டிய மறைமலையடிகள் திருவள்ளுவர்க்கு அடுத்தபடியாக வைத்தெண்ணத் தக்க தனிப் பெருந் தகுதியுடையவராவர்." (த. இ. வர. பக்., உ௩௩.,)

தமிழினம் ஆரியத்தினின்றும் விடுதலை பெற்றுத் தனிப் பெரும் இனமாக விளங்க வேண்டி உழைத்த பல்லோருள்ளும் மூத்தவர் : முதன்மையானவர் நந்தை **பெரியார்** ஆவார். அவர்க்குப் 'பெரியார்' என்னும் வையம் புகழும் விருதினை வழங்குவதில் பெருமளவு துணை நின்றவர் மறைமலையடிகளாரின் திருமகளார் நீலாம்பிகை யம்மையாரே. இவரைக் காதலித்துக் கடிமணம் புரிந்து காலமெல்லாம் குவலயம் போற்ற வாழ்ந்த பெருந்தகை திருவரங்கம் பிள்ளையாவார். அவரைப்பற்றிப் பாவாணர் கூறுகின்ற கருத்து நல்ல தொரு 'செய்திப் புதையல்' எனத் திகழ்கின்றது :

"இவர் (திருவரங்கம் பிள்ளை) 1920இல் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தோடிணைந்த திருநெல்வேலித் தென்னிந்தியத் தமிழ்க் கழகத்தைத் தோற்றுவித்தும், 1927இல் 'செந்தமிழ்ச் செல்வி' என்னும் செந்தமிழ் மாதிகையைத் தொடங்குவித்தும், தமிழைத் தாய் போற் பேணிக் காக்கவும், இந்தியை வன்மையால் எதிர்க்கவும், திருக் கோயில் வழிபாட்டைப் புதுப்பிக்கவும், தமிழர் தன்மானத்தோடு வாழவும், எல்லாப் புலவரையும் ஒன்ருய் இணைக்கவும், ஆயிரக் கணக்கான செந்தமிழ் நூல்களை அச்சிட்டு நேர்மை விலைக்கு விற்கவும், தமிழ் ஆராய்ச்சியை ஊக்கவும், தமிழை உலகெங்கும் பரப்பவும், இயன்றவரை தமிழ்ப் பெரும் புலவர்க்குப் பிழைப் பூட்டவும், ஆழ அடிகோலியவர்." (த. இ. வர., பக்.. உஉஎ.,)

இன்றைய, நம் கழகத்தின் ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களைப் பின் வருமாறு பாராட்டுகின்ருர் பாவாணர்:

"திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள், பொது அன்பில் தமையனரிற் சற்றுக் குறைந்தவரேனும், தமிழார்வத்தில் இம்மியுங் குன்றியவரல்லர்; நூல் வெளியீட்டுத் திறனிலும், வணிகத் திறனிலுமோ தமையனரிலும் பன்மடங்கு விஞ்சியவரே. மூத்தது மோழை என்பது தமையனர்க்குச் சற்றும் பொருந்தாவிடினும், இளையது களை என்பது தம்பியார்க்கு முற்றும் பொருந்தும். சிவக் கொண் முடிபு (சைவ சிந்தாந்த) நூற்பதிப்புக் கழகமும், மறைமலையடிகள் நூல் நிலையமும், இன்றுள்ள விரிவும், பெருமையும் பெற்றிருப்பதற்குத் திரு. சுப்பையா பிள்ளையின் அகப்புறக் கரணவுழைப்பே முற்றுங் காரணம்.

"ஒவ்வொரு தொழிற்கும் ஒவ்வொரு தனித்திறன் உள்ளது. நூல் வெளியீட்டுத் திறனை இயற்கையாகவே முற்றும் பெற்றவர் திரு. வ. சுப்பையா பிள்ளை."

"ஆயிரத்தொண்ணூருட்டை முற்றமிழர் (Tamils, Thousand and Eight hundred years ago) என்னும் ஆங்கில நூல், திரு. வ. சுப்பையாபிள்ளையால் வெளியிடப்பெற்று 12 உருபாவிற்கு விற்கப்பட்ட போதும், அதை அறியாத ஒரு மேலைச் செல்வர், அதன் பழம்படி யொன்றை, மூர் அங்காடியில் 600 உருபா கொடுத்து வாங்கிச் சென்ருர். இதிலிருந்து, திரு சுப்பையா பிள்ளையின் நூற்பதிப்புத் தொண்டின் பெருமையை உணரலாம்." (—செந்தமிழ்ச் செல்வி. சிலம்பு ருசு. பரல் க; பக். சு, எ.,)

இறுதியில், ஒட்டு மொத்தமாக நம் கழகத்தைப்பற்றிப் பாவாணர் கூறும் உண்மையுரை, உண்மைத் தமிழர் ஒவ்வொருவரின் உள்ளத்திலும் எழுச்சியைத் தோற்றுவித்துத் தலை நிமிரச் செய்கின்றது :

"வாள் போற் பகைவரும், கேள் போற் பகைவரும், தமிழை ஒரு சிறப்புமற்ற பன்மொழிக் கலவையான புன்சிறு புதுமொழியாகக் காட்டி வருகின்றனர். இதைக் கடந்த அறுபான் ஆண்டாகச் சை. சி. நூ. ப. கழகம் பல்வகையில் எதிர்த்து வருவதைத் தமிழுலகம் நன்கறியும். இக் கழகம் இன்றேல் தமிழ் இன்று இந் நிலையில் இருந்திராது." (செந்தமிழ்ச் செல்வி சிலம்பு ருசா. பரல் ௧ : பக். ௬.,)

இப்பொழுது, நம் கழகமென்னும் சீரிய அமைப்பிற்குப் பொது மேலாளராகத் தொண்டாற்றி வருபவர் திரு இரா. முத்துக் குமார சுவாமி ஆவார். இவரை, இன்றைய 'இளைய தலையின் எழுஞாயிறு' என்று பாவாணர் பன்முறை நண்பர்களிடம் உரையாடுகையில் பாராட்டி மகிழ்வார் என்பதை அறிகையில் உள்ளம் பெருமிதத்தால் துள்ளுகின்றது.

மலையெனத் திமிர்ந்த தோளும், முத்தமிழ் போற்றும் நெஞ்சும், அலையெனத் தவழும் முடியும், ஆவலைத் தூண்டும் மொழியும், சிலையென நிமிர்ந்த வடிவும், திங்களை உமிழும் விழியும் கொண்டு, கலையெனத் திகழ வாழும் கனிதமிழண்ணல் திரு. முத்துக்குமார சுவாமி அவர்கள் ஒரு நடமாடும் நூலகம். நம் கழகம் இதுகாறும் வெளியிட்டுள்ள ஏறத்தாழ 2000 நூல்கள் மட்டுமின்றிப், பல்லாயிரக்கணக்கான ஏனைய தமிழ்—ஆங்கில நூல்களைப்பற்றிய குறிப்புக்களும், சிறப்புக்களும் இவரது அறிவுச் சுரங்கத்தினுள் பொதிந்தும், பதிந்தும் கிடக்கின்றன.

இத்தகைய சீரிய சான்றோரின் அருந் தலைமையின் கீழ் நம் கழகமும், நம் கழகத்தின்வழி நாம் நாளும் போற்றும் நற்றமிழும் மண் விரிந்த இடமெங்கும் விண்முட்டும் புகழ் பெறும் என்பது உள்ளங்கை நெல்லிக் கனி.

வளர்க நம் கழகம்.

வாழ்க பாவாணர் புகழ்.

வாழிய செந்தமிழ் !

———

# குறி கூறும் மகளிர்

[திருவாட்டி நிர்மலா மோகன், எம்.ஏ., எம்.ஃபில்., மதுரை.]

(முன் இதழ் கஅசஆம் பக்கத் தொடர்ச்சி)

2. 4. இவ்வாறே, பெருங்கதையிலும், 'சேரியாயத்துச் செம்முதிர்ப் பெண்டிரோடு, கட்டறி மகடூஉ, கடிமுறத்திட்ட வட்ட நெல்லு மாண்பில பெரிதெனக், குற்றமுண்டெனிற் கூறுமின் எமக்கு என, செம்முதிர்ப் பெண்டிர் வினவக், கட்டுவிச்சி தெய்வமேறிக் கையும் உச்சிமேலுயர நீட்டி, மயிர் சிலிர்த்து, உடல் கூசி வாய் விரித்துக் குறி சொல்கின்ருள்' (பெருங்கதை, உஞ்சைக் காண்டம், 235 - 238).

2. 5. நச்சினுர்க்கினியர், 'கட்டினும் கழங்கினும்' என வரும் தொல்காப்பியக் களவியல் நூற்பா வரிகளுக்கு விளக்கம் அளிக்கும்போது, 'கட்டுவிச்சியும் வேலனுந் தாம் பார்த்த கட்டினுனுங் கழங்கினுனுந் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்யாக்கால் இம் மையல் தீராதென்று கூறுதலின், அவ்விருவரும் தம்மினுைத்த திறம்பற்றியதனையே செய்யுஞ் செய்தியிடத்தும்' (நச்சினுர்க்கினியர் உரை, தொல். பொருள். ப. 139) எனக் 'கட்டுவிச்சி' என்னும் சொற்றொடரைக் கையாண்டுள்ளார்.

3. 1. பத்தாம் நூற்ருண்டிற்குப் பின்னர்த் தோன்றிய கலம்பகங்களில் 'குறம்' என்னும் ஓர் உறுப்பு இடம் பெற்றுள்ளது. இவ்வுறுப்பில், குறத்தி தன் குடிச்சிறப்பு, குறிச்சிறப்பு, குறி கூறும் முறை, நன்னிமித்தம் பார்த்தல் ஆகியவற்றுள் ஒன்ருே அன்றி இரண்டோ கூறித் தலைவன் விரைவில் வந்து சேர்வான் என்று கூறுவதாக அமைந்துள்ளது. திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகத்தில், 'முறத்தில் இட்ட நெல்லை வறுத்துப் பார்த்துக் குறி கூறுவேன்' (பா. 74) என உரைக்கின்ருள் குறத்தி. 'சுளகில் இட்ட நெல்லை எண்ணிப் பார்த்து, அஃது ஒற்றை எண்ணுக வந்தால் நன்மை, இரட்டை எண்ணுக வந்தால் தீமை' (பா. 50) என்று கொள்ளும் முறையினைத் திருவருணைக் கலம்பகத்தில் காண்கிருேம். 'முறத்தில் உன்தாய் கொணர்ந்து போட்ட நெல்லை ஆராய்ந்து குறி கூறுமிடத்து, நீ மனத்தில் நினைத்த பொருள் ஒன்று உண்டு' என்று கூறித் தலைவனின் அங்க அடையாளம் கூறும் செய்தி (பா. 77) மதுரைக் கலம்பகத்தில் இடம் பெற்றுள்ளது. இக் குறத்தியர் இளைய வயதினர். 'இடப மால் வரையில் வாழும் இளங்குறப்பாவை

யான்' என்று அழகர் கலம்பகக் குறத்தி கூறிக்கொள்வது இதனை உணர்த்தும்.

3. 2. மீனாட்சியம்மை குறத்திலும் கட்டுப் பார்க்கும் வழக்கம் கூறப்படுகின்றது. 'இந் நாழி நெல்லையு முக்கூறு செய்து ஓர் கூற்றை இரட்டைப்பட எண்ணினபோது ஒற்றைப் பட்ட தம்மே, உனக்கு முன் வெள்ளிமலைப் பிள்ளையார் வந்துதித் தார், உனக்கினி யெண்ணின கருமம் இமைப்பினிற் கைகூடும்' (பா. 26) என்று தலைவிக்குக் குறியுரைக்கின்றாள் குறத்தி;

4. குறவஞ்சி

குறி கூறும் பெண்ணிற்கு முக்கியத்துவம் அளிக்கும் வகை யில் அவள் பெயராலேயே எழுந்த இலக்கியம் குறவஞ்சி. இதில் அவள் குறத்தி என்றும், குறவஞ்சி என்றும், சிங்கி என்றும் அழைக்கப்பெறுகின்றாள்.

4. 1. பாட்டுடைத் தலைவனின் சிறப்புக்களைப் பாடிவரும் குறத்தியைச் சிறப்பாக வருணிக்கின்றார் குறவஞ்சி ஆசிரியர்:

''இலகுநீ றணிந்து திலகமும் எழுதிக்
குலமணிப் பாசியும் குன்றியும் புனைந்து
கலைமான் சேர் மருங்கிற் சாத்திய கூடையும்
வலதுகைப் பிடித்த மாத்திரைக் கோலும்
மொழிக்கொரு பசப்பும் முலைக்கொரு குலுக்கும்
விழிக்கொரு சிமிட்டும் வெளிக்கொரு பகட்டுமாய்
உருவசி அரம்பை கருவமும் அடங்க
முறுவலின் குறும்பால் முனிவரும் அடங்கச்
சமனிக்கும் உரையாற் சபையெலாம் அடங்கக்
கமனிக்கும் மவரும் கடைக்கணால் அடங்க''
(குற்றாலக்குறவஞ்சி, பா. 41 : 19 - 28)

என்று அவள் பார்வையாலேயே அனைவரையும் அடக்கிவரும் எழில் அவளது இளமையைக் காட்டுவதாக அமைகின்றது. எனினும் அவள் ஒரு குழந்தையை ஈன்றவள். தலைவியிடம் தன் கைக்குழந்தையின் தலைக்கு எண்ணெய் வேண்டுவது இதனை உணர்த்தும்.

4. 2. சங்க இலக்கிய அகவன்மகளிர் இயல்புகள் அனைத் தும் குறவஞ்சிக்கும் ஏற்றிக் கூறப்பட்டுள்ளன. அகவன்மகள் கையில் சிறுகோல் வைத்திருந்தாள்; குறவஞ்சியும் மாத்திரைக் கோலும், குறக்கூடையும் வைத்திருக்கிறாள். அகவன்மகள்

சங்குமணி அணிகலன்களை அணிந்திருந்தாள்; குறவஞ்சி பாசி மணிகளையும் மற்றும் பல்வேறு அணிகலன்களையும் அணிந்திருக்கிறாள். அகவன்மகள் மலைவளம் பாடுகின்றாள்; குறவஞ்சியும் மலைவளம், நாட்டுவளம் முதலியன பாடுகின்றாள். ஆயின் சங்க காலந்தொட்டு 'குறம்' இலக்கியக் காலம் வரை கூறப்பட்ட கட்டுப் பார்க்கும் வழக்கம்—முறத்தில் நெல்லை எண்ணிப் பார்த்துக் குறி கூறுதல்—குறவஞ்சியில் இல்லை. குறவஞ்சிக் குறத்தி நன்னிமித்தம் நோக்கியும், தெய்வம் ஏறப்பெற்றும் குறியுரைக்கின்றாள். தன் குல தெய்வங்களையெல்லாம் வேண்டிக் குறி சொல்லத் தொடங்கியவள், 'என் உதட்டிலும் நாவிலும் சொல் சொல் என்று சக்கம்மா தேவி வந்து துள்ளுகின்றது. குறளிப்பேய் வந்து சொல்லும்படி என் வாயின்மேல் குத்துகின்றது. இனிமேல் நீ கேட்ட குறியைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக' (குற்றாலக்குறவஞ்சி பா. 73) என்று கூறிக் குறி சொல்லுகிறாள். 'குறி நான் சொல்வதோ, என் கருத்திலிருந்து உரைக்கின்றாள் எக்கலாதேவி' என்று சரபேந்திர பூபால குறவஞ்சியும் (பா. 54 : 15), 'எடுத்துக் கடிக்கு முன்னே இதயம் முற்று அருள் ஆவேசம் கொடுக்குது, நலம் உண்டு என்று குறிமுகத் தெய்வம் வந்து முடுக்குது சொல் என்று என்னை' (கீர்த்தனை : 51) என்று அழகர் குறவஞ்சியும் தெய்வமேறிக் குறி சொல்பவர்களாகவே படைக்கப்பட்டுள்ளனர்.

4. 3. குறம், குறவஞ்சி ஆகியவற்றில் வரும் குறத்தியர், குறி சொல்லத் தொடங்குமுன் சில நடைமுறைகளைக் கையாள்கின்றனர். தரை மெழுகிக் கோலமிட்டு, நிறைநாழி நெல்லளந்து, பிள்ளையார் உருப்பிடித்து வைத்து, அதற்கு அருகம்புல் சார்த்தி, தீபதூபம் இட்டுப், பழம், தேங்காய், அவல், பொரி முதலானவற்றைப் படைத்து வணங்குகின்றனர். இது, சங்க இலக்கியத்தில் வெறியாடலின்போது, செம்மறி அறுத்து, குருதிப்பலியிட்டு, தினைப் பிரப்பையும், மலரையும் படைத்து வழிபடுவதனைப்போன்று அமைந்துள்ளது (குறுந். 263; திருமுருகு 218). சிலப்பதிகாரத்திலும், சாலினி தெய்வமேறப்பெற்றபோது, அவளைக் கொற்றவையாக எண்ணி வழிபடும் மறவர்கள், சந்தனம், அவரை, துவரை முதலியவற்றின் அவியல், எட்கசியும் நிணங்கலந்து துழந்தட்ட சோறு, மலர்கள், அகிற்புகை, பிற மணப்பொருள்கள் ஆகியவற்றைப் படைத்து வணங்குவது (சிலப். வேட்டுவவரி : 36 - 39) கருதத்தக்கது. பின்னர், பக்தி இயக்கக் காலத்தில், நம்மாழ்வார் 'இக் கட்டுவிச்சி சொற்கொண்டு... கள்ளும் இறைச்சியும் தூவேன்மின்' என்று பலியிடும் வழக்கத்தைக் கடிந்துரைக்கின்றார். எனவே, நம்மாழ்வாருக்குப் பின் தோன்றிய

குறிகூறும் இலக்கியங்கள் குருதிப் பலியைத் தவிர்த்து, அவல், பொரி, தேங்காய், பழம் போன்ற பொருட்களைப் படைத்து வணங்கும் வழக்கத்தையே சுட்டக் காண்கிறோம்.

4. 4. கலம்பகம், குறம், குறவஞ்சி ஆகியவற்றில் வரும் குறத்தியர் வறுமையுற்றவராகவே காணப்படுகின்றனர். பற்பல அணிகளை அணிந்திருந்ததாகக் கூறப்படும் குறவஞ்சிக் குறத்தி முதலில் தன் பசி ஆறிடக் கஞ்சி வேண்டுகின்றாள்; பின் வெற்றிலை, பாக்கு, புகையிலை வேண்டுகிறாள் (குற். குற. பா. 64). தன் கைக்குழந்தையின் தலைக்கு எண்ணெய் வேண்டுகிறாள் ஒருத்தி (சரபேந்திர பூபால குறவஞ்சி பா. 50); தனக்குப் புடைவை வேண்டுகிறாள் மற்றொருத்தி (கும்பேசர் குறவஞ்சி. பா. 67 : 2); இவ்வளவும் வேண்டும் குறத்தி, இந்த வகையில் தமக்கு உதவுதல் இவ்வுலகில் பண்டுதொட்டு இருந்துவரும் முறைமைதான் என்பதையும் கூறுகின்றாள் :

> "இந்த வகையெல்லாம் எங்கட் கீந்திடுதல் அம்மே பாரில்
> எங்கும் உள்ள முறைமையதாம்—இன்றைக்கல்ல அம்மே''
> — (சர. குற. பா. 50 - 6)

மீனாட்சியம்மை குறத்தில் வரும் குறத்தி, தான் வறுமையுற்ற இந் நிலைக்குக் காரணம் தன் சக்களத்தி என உரைக்கின்றாள். (முன்பு குறவர் மலையாட்சியையே வள்ளி தனக்குச் சீதனமாக வழங்கினோம். ஆனால் இப்பொழுது பிள்ளை தலைக்கு எண்ணெய் இல்லை; அரைக்கும் ஒரு துணியில்லை; என் மாற்றாள் வந்ததற்பின் வறுமையுற்றோம்'—மீ. குறம். பா. 20).

## 5. முடிவுகள் :

5. 1. நெல்லையோ அன்றிக் கழற்சிக் காய்களையோ எண்ணிப் பார்த்துக் குறியுரைக்கும் கட்டுப் பார்த்தலும், கழங்குப் பார்த்தலும், தெய்வம் ஏறப்பெற்றுக் குறி கூறும் வெறியாடலும் சங்க இலக்கியங்களில் குறி பார்க்கும் முறைகளாக அமைந்திருக்க, இடைக் காலத்தில் வெறியாட்டுக் குறைந்து, கட்டுப் பார்த்தல் சிறப்புற்றது என்பதும், குறவஞ்சி இலக்கியக் காலத்தில் வெறியாடலில் ஒரு பகுதியான தெய்வமேறிக் குறி சொல்லுதல் நிலைத்திருக்க, மற்றொரு பகுதியான செம்மறியறுத்துப் பலியிட்டு வெறியாடலைத் துவங்கும் வழக்கம் அருகியது என்பதும் புலனாகின்றன.

5. 2. சங்க இலக்கியங்களில் குறி கூறும் மகளிர் முதிய வயதினராகச் சித்திரிக்கப்பட்டுள்ளனர்; ஆயின் இடைக்கால

இலக்கியங்களிலும், கலம்பகம், குறம், குறவஞ்சி ஆகியவற்றிலும் இடம்பெறும் குறிகூறும் மகளிர் இளைய வயதினர்; குழந்தையை ஈன்றவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**5. 3.** குறி கூறும் மகளிரைக் குறிப்பிடும் சொல்லாட்சி களும் காலந்தோறும் மாறி வந்திருக்கின்றன. சங்க இலக்கியங் களில் அகவன்மகள், செம்முதுபெண்டிர், முதுவாய்ப் பெண்டிர், முதுவாய்ப் பொய்வல் பெண்டிர், அறியுநர் என்னும் சொல்லாட்சிகளும், இடைக்கால இலக்கியங்களில் கட்டுவித்தி, கட்டுவிச்சி, கட்டறி மகடூஉ ஆகிய சொல்லாட்சிகளும், குறம், குறவஞ்சி, கலம்பகம் ஆகிய இலக்கியங்களில் குறத்தி, குறவஞ்சி, சிங்கி ஆகிய சொல்லாட்சிகளும் குறி கூறும் மகளிரைக் குறிப்பிடு வனவாக அமைந்துள்ளன.

———

## சாவகத்தில் தமிழ்க் கடவுள்கள்

சாவகத் தீவில் காணப்படும் திருக்கோயில்களுள் பல சிவனுக்கு உரியன. சாவகமக்களின் அமரமாலை என்னும் நூல் மிகத் தொன்மை வாய்ந்தது. அஃது அந்நாட்டு மக்கள் வழி பட்டதெய்வங்களைப் பற்றிக் கூறுகிறது. அந்நூலின் மூலம் சாவகத் தீவினர் சிவபெருமானையே முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபட்டார்கள் என்று தெரிகிறது. சிவன், ஈஸ்வரன், குரு என்னும் பெயர்களால் அவர்கள் வழிபட்டு வந் திருக்கின்றனர். சுமத்திராவிலே லாரா யொங்ராங் என்னும் இடத்தில் பல ஆலயங்கள் அழிந்து கிடக்கின்றன. அதன் நடுவில் பெரிய சிவன் கோயிலும் திருமால், நான்முகன் கோயில்களும் எதிரே நந்தியின் ஆலயமும் காணப்படுகின் றன. இஃதன்றி மங்கைபங்கன் திருவடிவமும் தென்படுகின் றது, கணபதியின் வடிவங்கள் பல இங்குள்ளன. இவைகள் எல்லாம் தமிழகத்தில் உள்ள கோயில்களில் காணப்படும் படிமங்களை யொத்தனவாகவே காணப்படுகின்றன.

இங்குச் சைவர்கள் வணங்கும் சிவன், நான்முகன், திரு மால், அகத்தியர் (சிவகுரு), கணபதி, முருகன் முதலிய சிலைகளோடு (இலட்சுமி) திருமகள் சிலையும் கிடைத்துள்ளன. திருமகள் சாவகமக்களால் நிலம் செழிப்புறச் செய்யும் தெய்வ மாகவும் செல்வந்தரும் தெய்வமாகவும் எண்ணி வழிபடப் பட்டு வருபவளாகும்.

—நுண்கலைச் செல்வர் திரு. அ. இராகவன்
(தமிழக சவாகக் கலைத் தொடர்புகள், பக். 19).

# தொல்காப்பியம், புள்ளிமயங்கியல்—15

[ஆபிரகாம் அருளப்பன்]

*மகர விறுதி வேற்றுமை யாயிற்*
*றுவரக் கெட்டு வல்லெழுத்து மிகுமே.*

மகர மெய்யெழுத்தை இறுதியிற் கொண்ட பெயர்ச்சொற்கள் நிலைமொழியாகவும், க, ச, த, ப என்னும் வல்லெழுத்துக்களை முதலாகக்கொண்ட சொற்கள் வருமொழியாகவும் வேற்றுமை வழியில் புணர்நிலை பெறும்போது நிலைமொழி இறுதியாகிய மகர மெய் முழுவதும் கெடும். வருமொழி முதலிலுள்ள வல்லெழுத்துக்கள் க, ச, த, ப மிக்கு நிற்கும்:

மரம்+கோடு=மரக்கோடு; மரம்+செதிள்=மரச்செதிள்; மரம்+தோல்=மரத்தோல்; மரம்+பூ=மரப்பூ;

குன்றகம்+காடு=குன்றகக்காடு; குன்றகம்+சீறூர்=குன்றகச் சீறூர்; குன்றகம்+தேன்=குன்றகத்தேன்; குன்றகம்+பாவை=குன்றகப் பாவை.

மகரம்+குழை=மகரக்குழை; மகரம்+செப்பு=மகரச்செப்பு; மகரம்+தூண்=மகரத்தூண்; மகரம்+பகுவாய்=மகரப்பகுவாய்; சங்கம்+காலம்=சங்கக் காலம்; சங்கம்+செய்யுள்=சங்கச் செய்யுள்; சங்கம்+தோன்றல்=சங்கத் தோன்றல்; சங்கம்+பாடல்=சங்கப் பாடல்.

வடமொழிப் பற்றுடையார் சங்கம், காலம் என்ற சொற்களை வடமொழியாக மதித்து, 'இடையுரி வடசொலினியம்பிய கொளாதவும்', எனவரும் நன்னூல் புணரியற் புறனடை நூற்பாவைச் சான்று காட்டி, 'இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன் கசதப மிகும்', எனவரும் நன்னூல் விதியைப் புறக்கணித்து, சங்கம்+காலம்=சங்கக் காலம் என வருதலை மறுத்துச் சங்ககாலம் என வருமொழி வல்லெழுத்து மிகாமல் எழுதுதலை உறுதிப்படுத்தி விட்டார்கள்.

சங்கம், காலம் என்ற இரு மொழிகளும் தமிழ்ச் சொற்களே. சங்கம், ஒரு பேரெண்ணைக் குறிக்கும் பொருளில் பரிபாடல் 2-13இல் 'நெய்தலுங் குவளையு மாம்பலுஞ் சங்கமும்' என வருகிறது. காலம், தொல்காப்பியத்தில் முப்பத்திரண்டு இடங்களில் ஆளப்பட்டுள்ளது.

மற்றும், எச் சொற்களும் தமிழ் எழுத்துக்களால் ஆயனவாக நின்று தொடர்நிலை பெறும்போது தமிழ் இலக்கண விதிகட்கு ஏற்பப் புணர்நிலை பெறுதலே முறையாகும்.

———

# பாண்டித்துரைத் தேவர் பாடிய காவடிச் சிந்து

[க. சி. கமலையா]

மதுரையில் நான்காம் தமிழ்ச் சங்கம் நிறுவிய பாண்டித் துரைத்தேவர் முருகப் பெருமான்மீது காவடிச் சிந்து பாடினர். அக் காவடிச் சிந்து பாடுவதற்குரிய சூழ்நிலை அமைந்ததைக் குறித்து மதுரைத் தமிழ்ச் சங்க நூற்பரிசோதகர் மு. ரா. அருணா சலக் கவிராயர் எழுதிய முகவுரை நோக்கற்பாலது:

"ஒரு நாள், பாலவனத்தம் ஜமீந்தாரும், கேட்பார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழியும் சொல் வன்மையாளரும், இலனென்னு மெவ்வ முரையாமையுங் குல நலமுடைய கோமானும், சிவ நேசச் செல்வருமாகிய ஸ்ரீமான் பாண்டித் துரைத் தேவரவர்கள் சமூகத்தில் வித்வான்கள் சிலர் கூடியிருக்குங்கால், இன்னிசையோடு பாடுமொரு நண்பர், சென்னி குளம் அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்துக் கண்ணி களிற் சிலவற்றைப் பாடச் சிந்தை களி கொண்ட எம்மனோர், இந்தக் காலத்தில் எந்தத் தமிழ்ப் புலவராலும் இவ்வாறு சிந்து பாட வியலாது எனக் கூற, அது கேட்ட பிரபு அவர்கள், 'அது பொருந்தாது; திருவருளுளதேல், அதனினும் சிறக்கப் பாடுதல் கூடாத தன்று', என்று கூறிவிட்டு, சின்னாளில் முகவை சென்று திரும்பி வந்தபோது தாங்கள் பாடிக் கொணர்ந்த காவடிச் சிந்துச் சந்தங்கள் சிலவற்றை அவர்கள் இன்னிசையுடன் படித்துக் காட்டினார்கள். அவற்றை யாங்கள் கேட்டபோது, ஒவ் வொரு கண்ணியும் சந்தச் சுவையுடன் எந்தச் சுவையினும் முந்தத்தக்கதாக, சொன்னயமும் பொருணயமும் அகப் பொருட் டுறை வழாமையும் அமையக், கேட்போருள்ளத்தைப் பெரிதும் பிணித்து நிற்றல் கண்டு வியப்பு முவப்பு மடைந்து, பிரபு அவர்களை, அக் காவடிச் சிந்தை முற்றுவித்துத் தரல் வேண்டு மென்று என்னன்பர்களுடன் யானே முன்னின்று கேட்டுக் கொண்டேன்.

"அவர்கள் என் வேண்டுகோளை யேதுவாகக் கொண்டு தமது முன்னோர்களால் ஸ்தாபிக்கப்பெற்ற சிவஞானபுரத்துத் திருக்கோயில் கொண்டகுளும் சுப்பிரமணிய சுவாமிமீது பத்திரசம் பழுக்கவும் மோனை, திரிபு, யமகம், சிலேடை, கற்பனையாகியவை

வேண்டியவா ருங்காங்கமையவும் படிப்பவர் கேட்பவர் மனத்தைக் கவரும்படி பாடித் தம் மதுரைத் தமிழ்ச் சங்கத்து வித்துவான்கள் பலருடன் என்னையுஞ் சேர வைத்துக்கொண்டு வாசித்துக் காட்டினர்கள். அப் பாடல்களைக் கேட்டாரெல்லாரும் ஒவ்வொரு நயங்கருதி இன்னுமொரு தரம் படிக்க வேண்டுமென்று பலரும் பல முறை படிக்கச் சொல்லிக் கேட்டுக் கேட்டுப் பரமானந்த முற்றனர். யானும் அவ்வாறே கழிபேருவகையிற் களித்தனன்.''

விநாயகர் துதியாகும் முதலாவது சிந்து அண்ணாமலை ரெட்டியாரின் காவடிச் சிந்தின் விநாயகர் துதிச் சந்தத்தை ஒத்திருக்கிறது. அளவும் அவ்வாறே. பாண்டித் துரைத் தேவரின் பாட்டுடைத் தலைவன் முகவைச் சிவ ஞான புரத்தில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் 'நெடும் பெருஞ்சிமயத்து நீலப் பைஞ்சுனை' யில் வளர்ந்த சேயவன். கார்த்திகைப் பெண்கள் முலைப்பாலருந்திய மணம் மெத்தக் கமழுகின்ற செவ்வாயவன்—தமிழில் சிந்து பாட மாபாரதத்தை மாமலையில் வரைந்த செங்கையான் பொற்பாதங்களைப் போற்றித் தொழுகின்ருர் ஆசிரியர்.

மதியைப் பழித்ததிரு வதனக் கொடிச்சி தரு
மகளைத் தழுவி மகிழ் கொண்டவன்—பத
யுகளத் தென தி துயர் விண்டவன்—ஆறு
மாதர் முன் பரிவால் வழங்குப யோதரஞ் சொரி பாலருந்திய
மண மெத்தவே கமழ் செவ் வாயவன்—சர
வணகற்றடத்து வளர் சேயவன்

துதியைப் புரியுமன்பர் கதியைப் பெறவு மின்ப
சுக மிக்கு தவ வந்த மேலவன்—இருள்
உக மெய்க்க திர் வழங்கு வேலவன்—பண்ணை
சூழ்வருஞ் சிவ ஞான மா புரி வாழ்தருங்குக னை வேள்விழி
சுரக்குங் கருணை நன்று கூடவே—சுவை
பரக்குந் தமிழிற் சிந்து பாடவே

நறை மிக்கெழு பொற் கொன்றைத் தொடையைப் புனிதக் கங்கை
நதியைப்ப ணியைக் கொண்ட வேணியார்—சிரம்
விதியைத்து ணியக் கண்ட பாணியார்—என்றும்
நாடியும்பர்களோ டயன் றுதி பாட மன்றினுள் ஆடுகின்றவர்
நலமிக்க திருமைந்த னயவன்—மாது
வலைபைக்கு ளமுகந்த தூயவன்

மறையிற் புகழ் சிறந்த கதையைப் பெரிய தங்க
மலையிற்றனி வரைந்த செங்கையான்—முடித்
தலையிற்பொ லிவுதந்த கங்கையான்—குற

*மானனுளுறை ஏனலா ரகல் கானிலே மத யானையாகி முன்*
*வருபொற்சர ணங்களைப் போற்றியே—அன்பு*
*மருவித்தொ ழுவன் பணி யாற்றியே.*

வல்லிக் கொடியை யொத்த குறவர் குலமகள் திங்களைப் பழித்த திருமுகம் உடையவள். அத்தகையளைத் தழுவி மகிழ் கின்றவன் முருகன். அவனைத் துதிப்பவர் நற்கதியைப் பெறவும் இன்பம் பெறவும் இருளகலவும் அருள் புரிபவன் அவன். சிவ ஞான புரத்துறை அறுமுக வேள் கருணை சுரக்கும் கண்களை யுடையவன். அவன் புகழைத் தமிழ்ச் சிந்திற் பாட மான் போன்ற வள்ளி முன் கானிலே மத யானையாய் வந்த மூத்த பிள்ளையாரைத் தொழுது பணிகின்ருர் சிந்தின் ஆசிரியர். கொன்றை மாலையும் நதியும் பாம்பும் சடையிற் சூடிய பெருமான் பிரமனின் தலைகளில் ஒன்றைக் கொய்தவர். மன்றினுள் கூத்தப் பெருமான் ஆடும்பொழுது உம்பர்களுடன் அயன் தொழுது நிற்கின்ருன். சிவ சின்னங்களுடன் படைப்புக் கடவுள் இறைவன் ஆடலுக்குத் தாளம் கொட்டுவதைப் பேரூர்க் கோயிலின் மண்ட பத்திலுள்ள சிற்ப மொன்றில் காணலாம். அம்பலத்திலாடும் கடவுளின் மைந்தனுவார் மூத்த பிள்ளையார். கணபதி 'ஒற்றைக் கட்டை' என்று பெரும்பாலனவர் கொள்வர். ஆனுல் விநாயகர் வலபைக்கு உளமிகுந்த தூயவர்.

*மதியைப் பழித்த திரு வதனக் கொடிச்சி தரு*
*மகளைத் தழுவி மகிழ் கொண்டவன்*

முருகன் என்ற சிந்தின் வரிகள்,

"ஒரு முகம்
*குறவர் மட மகள் கொடிபோல் நுசுப்பின்*
*மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே"*

என்ற திருமுருகாற்றுப்படை வரிகளை நினைவூட்டும் வள்ளி தெய்வானையுடன் முருகப் பெருமான் காட்சி தரும் திருமேனிகளை உற்று நோக்கின் குமரன் பார்வை வள்ளி பக்கம் சாய்ந்திருப் பதைக் காணலாம்.

கொண்டவன் விண்டவன், வாயவன் சேயவன், மேலவன் வேலவன், கூடவே பாடவே, வேணியார் பாணியார், ஆயவன் தூயவன், செங்கையான் கங்கையான், போற்றியே என வரும் ஈற்றெதுகைகள் ஓசை நயம் செப்பி நிற்கின்றன. வேலவனை மேலவன் எனப் பாண்டித் துரைத் தேவர் நவில்வது கடவுள் அனைத்துக்கும் அனைவர்க்கும், மேலானவன் என்ற கருத்தை

வெளியிடுகிறது. 'சிரம் விதியைத் துணியக் கண்ட பாணியார்' என்ற சொற்றொடரில் 'விதி' என்ற சொல் படைப்புக் கடவுளைக் குறிக்கும். 'விதி' என்ற சொல் ஊழையும் பொருளாகக் கொண் டது. ''ஊழிற் பெருவலி யாவுள ?'' என்ற கேள்வியைத் திருக் குறள் எழுப்பும். விதி பிறர் சிரத்தைத் துணிப்பது போக, விதி யின் சிரத்தைத் துணித் தலைந்தவர் பிச்சையோடேந்தித் திரியும் சிவனார். 'சிரம் விதியைத் துணியக் கண்ட பாணியார்' என்பதில் அமைந்துள்ள முரண் தொடை இலக்கிய நயம் செறிந்து கமழ் கின்றது.

பாண்டித்துரைத்தேவரின் இரண்டாவது சிந்து முருகன் துதியாயமைகிறது. அண்ணாமலை ரெட்டியாரின் 'கண்ணாயிரம் படைத்த' என்று தொடங்கும் சந்தத்தை யொத்த சந்த முடை யது.

நஞ்சார் திருக்களத்துப் பஞ்சான னத்தவர்க்கு
நனிமகிழ் வைத்தரு தனயனெனத் திகழ் நாதனே—நாளும்
புனித மனத்தவ ரினிது வழுத்திய போதனே.
அஞ்சா விறற்புயக்ர வுஞ்சாசுரச் சழக்கன்
அடலொழியத் தனி சுடரயிலைத் தொடு மய்யனே—அகல்
கடலுலகிற்பல இடர்களொழித் தருள் செப்பனே.

பண்ணார் மொழிக் குறத்தி கண்ணாசை மெத்த வைத்துப்
பரவு புனத்திடை யிரவு தனிற்றிரி பாதனே—குளிர்
சரவணநற்பெயர் விரவு தடத்தெழு நீதனே.
எண்ணாதிழித் துரைக்கும் நண்ணார் குலத்தை முற்ற
இகல்வித் தெம கரி புகுத்திய ஈசனே—என்றும்
புகழ்புரி பத்தர்தம் அகமருவித் திகழ் நேசனே!

வண்டார் செழுங்கடம்பின் தண்டார் புனைந் திலங்கும்
மருவு தடங்கிரி யொருபனி ரண்டெனும் வாகனே—உயர்
சுரபதி தந்திடு தெரிவை மகிழ்ந்தணை யோகனே!
மண்டாசை யாலுடலம் கொண்டாழி சூழுலகில்
மதியழி வாருயர் கதிபெற மேவுகு மாரனே—செந்திற்
பதியிடை வானவர் துதிசெய வாழ்வுறு தீரனே.

பாலாழியிற் றுயிலும் மாலானவர்க் கினிய
பரிவு மிகுத்திடு மருகனெனத் தகு பண்பனே—அயன்
தெரிய மறைப்பொருள் விரிய வுரைத்தருள் நண்பனே.
வேலாமலைக்குமரி பாலா தமிழ்க் கருள்செய்
மீறலைவுங் குளிர் வானதி தந்திடு மெய்யனே—புகழ்
வானவுஞ் சிவ ஞான புரந்திகழ் துய்யனே.

ஐந்து முகங்களையுடைய சதாசிவன் மனமகிழும் நாதன், அறிவன். வேலெறிந்து கிரவுஞ்சமலையைப் பிளந்த ஐயன், அஞ்சேல் என்று இடர்களொழித்திடு செய்யன், வள்ளியின் காதல் வேண்டி இரவில் தனியே யலைந்த பாதன், சரவணப் பொய்கையினின் றெழுந்த நீதன், அசுரரை எமனுலகுக் கனுப்பிய ஈசன், பக்தரின் நேசன், மலையொத்த பன்னிரண்டு தோளன், தேவர்கோன் தெரிவை தெய்வயானையை மகிழ்ந்தணை யும் யோகன், மக்கள் உயர்கதி பெறஉதவும் குமாரன், செந்திற்பதி யில் வாழும் தீரன், திருமால் மருகனெனும் பண்பன், வேதப் பொருளை வேதனுக்குரைத்த நண்பன், வானதி தந்திடும் மெய் யன், சிவஞானபுரந்திகழ் துய்யன் என்று முருகனைப் பாடுகின்றார் பாண்டித்துரைத் தேவர்.

இச் சிந்தில் வரும் சொற்றொடர்கள் இன்பத்தேன் சிந்து பவை. 'நஞ்சார் திருக்களத்துப் பஞ்சான னத்தவர்' என்று நஞ்சுண்ட பெருமான் குறிப்பிடப்படுகின்றார். ஆனனம் என்றால் முகம். அதிவீரராம பாண்டியர் 'ஐயானனன்' என்றும், குமரகுரு பரர் 'சடானனன்' என்றும் சிவனையும் சிவகுமாரனையும் பாடியுள் ளனர். சிவனுடைய ஐந்து முகங்களாவன அகோரம், சத்யோ ஜிதை, வாமதேவம், ஈசானம், தத்புருஷம். ஐயானனனைப்பற்றித் திருமந்திரப் பாடலொன்று நமக்கு விளக்கமளிக்கும்:

அஞ்சு முகமுள ஐம்மூன்று கண்ணுள
அஞ்சினொ டஞ்சு கரதலந் தானுள
அஞ்சுடன் அஞ்சா யுதமுள நம்பியென்
னெஞ்சு புகுந்து நிறைந்துநின் றானே.

அவனே சதாசிவன். 'புனித மனத்தவ ரினிது வழுத்திய போதன்' முருகன். ஆம், 'சித்தம் அழகியார் பாடாரோ நம் சிவனை' என்ற மாணிக்கவாசகரின் சொற்களின் பொழிப்புரை போன்றிருக்கின்றதன்றோ பாண்டித்துரைத் தேவரின் சொல் லாட்சி? கிரவுஞ்சகிரியைத் தன் சுடரயிலால்—ஒளி பொருந்திய வேலால் பிளந்த முருகன் இடராழியை ஒழித்த செய்யன். அழகனைச் 'செய்யன், சிவந்த ஆடையன்' என்று திருமுருகாற்றுப் படை இயம்பும்.

பண்ணார் மொழிக்குறத்தியின் கண்ணாசை முருகனைக் கிறங்க வைத்தது.

'கூனேறு மதிநுதல் தெய்வக்குறத்திமுன் னாகவணந்து
உன்குற்றேவல் செய்யக் கடைக்கண் பணிக்கென

குறையிரந்து அவள் தொண்டைவாய்த்
தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன்'

முருகன் என்று குமரகுருபரர் முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழில் பாடுவார்.

இழித்துப் பழித்துப் பேசும் எதிரிகளை எமனுலகுக்கனுப்பிப் பத்தர் நெஞ்சம் தேடிச் சென்றடையும் நேசன் முருகன், மலைக் குமரிபாலன்.

'எண்ணு திழித்துரைக்கும் நண்ணார்குலத்தை முற்ற
இகல்வித்தெம நகரிபுகுத்திய ஈசனே —என்றும்
புகழ்புரி த்தர் தம் அகமருவித்திகழ் நேசனே'
'வேலா மலைக்குமரிபாலா'

என்றெல்லாம் பாண்டித்துரைத் தேவர் பாடி மகிழ்வது,

'மலைமகள் மகனே மாற்ருேர் கூற்றே'

என்ற திருமுருகாற்றுப்படை கூறுவதை விரித்துரைக்கின்றது.

'சேல்பட்டழிந்தது செந்தூர் வயற்பொழில் தேங்கடம்பின்
மால்பட்டழிந்தது பூங்கொடியார் மனம்'

என்று அருணகிரிநாதர் பாடுவார். வானவர் கோன் மகள் தேனவள் தெய்வயானை வண்டுகள் மொய்க்கும் கடப்பமாலை புனைந்த பன்னிரண்டு தோள்களை அணைந்து மகிழ்வள் என்று உரைப்பார் பாண்டித்துரைத் தேவர்.

நீரில் மூழ்கின்றவனைக் காப்பாற்றிக் கரையேற்றுவர் கருணையுள்ளம் படைத்தவர். இறைவன் பெருங் கருணைப் பேராறு. ஆசை கொண்டு மோசம் போகும் மதியிழப்பவருக்கும் கதியளிக்கின்ருன் கடவுள். விண்வழிச் செல்லும் வானவர் அத்தகையனை-அலைவாயமர்ந்த பெருமானைப் பணிகின்றனர்.

'பாலாழியிற் றுயிலும் மாலானவர்க் கினிய
பரிவுமிகுத்திடு மருகனெனத்தகு பண்பனே'

என்று பாண்டித்துரைத் தேவர் தேன்பிலிற்றும் செந்தமிழில் பாடுகிருர்.

மால்மருகனென முருகப் பெருமானைப் பாடிப் பரவும் அருணகிரிநாதரின் எதிரொலியைப் பாண்டித்துரைத் தேவர் வாக்கிலும் காண்கின்ருேம்.

(தொடரும்)

———

# பாட்டன் பாட்டி—முறைப்பெயர்கள்

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

முதல் உலகத் தாய்மொழி தமிழ் என்பது மொழிஞாயிறு பாவாணரின் அடிப்படைக் கொள்கை. அக்கொள்கைக்கு அரணாக மொழிநூற் சான்றுகள் பலவற்றை ஆங்காங்கு எடுத்துக் காட்டித் தெளிவுபடுத்தியுள்ளார். உலகமொழிகள் பலவும், குறிப்பாக இந்தைரோப்பிய மொழிகள் தமிழிலிருந்தே கிளைத்திருக்க வேண்டும் என்பதற்கான அடிப்படைச் சொல்லமைப்புகள், இலக்கணக்கூறுகள் மொழியியல்—தோற்ற வளர்நிலை ஆய்வுத் தொடர்பு—வெளிப்பாடுகள் ஆகியவை பரவலாகக் காணப்படுகின்றன. அடிப்படைச் சொல்லமைப்புகளில் முறைப்பெயர்கள் குறிப்பிடத்தக்கன.

தமிழிலுள்ள பாட்டன் பாட்டி என்னும் முறைப் பெயர்களின் தோற்றம் இந்தைரோப்பிய மொழிகளில் பெற்ற திரிபு, தமிழில் பெற்றுள்ள மாற்றங்கள் இவற்றை ஆய்வது இக் கட்டுரையின் நோக்கம். அறப்பழங்காலத்தில், பொதுவாக மக்கள் நீண்ட வாணாள் பெற்றிருந்தமையின் பாட்டனும், பாட்டனுக்குத் தந்தையான பூட்டனும், பூட்டனுக்குத் தந்தையான ஓட்டனும் (சேயான்) ஒருமிக்க, ஒத்த காலத்து வாழ்ந்திருக்கின்றனர்.

''பாட்டனுக்கு மேல் பூட்டன்
பூட்டனுக்கு மேல் ஓட்டன்
ஓட்டனுக்கு மேல் உறவில்லை''

என்பது முதுமொழி. நரையும் திரையும் கொண்டு தளர்ந்து தண்டூன்றும் முதியர் பலராக இல்லத்தில் அல்லது ஒரு குடியில் காணப்படின், அவர்களைத் தாய்வழிப் பாட்டன்மார் என்றும் தந்தைவழிப் பாட்டன்மார் என்றும் பிரித்துப் பேசுவது உலக வழக்கு. அறப்பழங்காலத்துத் தோன்றிய அவ் வழக்கம் இன்றும் நாட்டுப்புறத்தில் பேச்சு வழக்காக நிலைத்திருப்பதைக் காணலாம்.

அம்மாவின் தாயை அம்மாத்தாள், அம்மாத்தா, அம்முதா, அம்தா என்றெல்லாம் அழைப்பதைக் கோவை மதுரை மாவட்டங்களில் கேட்கலாம். அப்பாவின் தந்தையை அப்பத்தா, அப்பச்சன், அப்பச்சி என்று வழங்குகின்றனர். அம்மாவின் தந்தையை அம்மாப்பா—மாப்பா—வாப்பா என்று தஞ்சை, பழனி பகுதியில் மரக்காயர் அழைக்கின்றனர். பாட்டனைக்குறித்த 'வாப்பா' என்னுஞ் சொல்லாட்சி இன்று தந்தையைக் குறிப்பதாக அவர்களிடையே வழக்கூன்றிவிட்டது.

தொல்காப்பியர் காலந்தொட்டு இலக்கணம் வகுத்த சான்ஞேர், உலகவழக்கு செய்யுள் வழக்கு இரண்டும் நாடியே மொழிக்கு இலக்கணம் வகுத்தனர். உலக வழக்குச் சொற்கள் அனைத்தும் அவர்கள் நூலில் இடம் பெருததாலும் பன்மடித் திரிபும் மருவும் கொண்ட சொற்களை அவற்றின் தொல்வடிவம் காட்டி விளக்காமையாலும் பாட்டன் பாட்டி போன்ற சொற்களின் வரலாறு புலமக்களுக்கன்றிப் பொதுமக்களுக்கு விளங்காதாயிற்று.

அப்பன்—அத்தன் — அப்பத்தன் —அப்பாத்தன்—பாத்தன் —பாட்டன்.

அப்பன்—ஆத்தாள்—அப்பாத்தாள்— அப்பாத்தி — பாத்தி —பாட்டி என்று திரிந்துள்ள உண்மையைக் காணலாம்.

ஒ. நோ. ஏந்தல்—ஏத்தன்—ஏட்டன்
ம. ஏட்டன்—பெரியோன், அண்ணன்

போந்தை—போத்தை—போத்து— பொத்து — பொட்டு — தெ. பொட்டு—பனையின் குருத்தோலைத் தாலி அல்லது பனையோலையால் செய்த திருமண அடையாளம். பதம்—உணவு, தவசம்.

உண்டாயிற் பதம் கொடுத்து இல்லாயின் உடனுண்ணும்
(புறநா. 95).

க. பத்த—நெல்.

பதம்—படு. பத்தா—இருள. புட்டு (உணவு)
பதம்—பத்தா—புத்தா—புட்டா—புட்டு—*E* food.

அப்பாத்தன், அம்மாத்தாள் என்னும் இரு வழக்குகள் மேலை மொழிகளின் தொடக்க காலத்தில் தந்தையையும், தாயையும் குறிப்பன வாயின.

அப்பன்—அத்தன்—அப்பாத்தன்—பாத்தன்
*Skt*. பித்ரு—*E*. father.

அம்மாள்—ஆத்தாள்—அம்மாத்தாள்—அம்மாத்தர்.
மாத்தா (மாதா)—*SKt*. மாத்ரூ. *E*. Mother.

*father*, n—*ME*. fader, fro *OE*. faeder, rel. to *OS* fadar, *ON*. faoir, *Dan*., Swed fader, *OFris*. feder, *Du*. vader, *OHG*. fater, *MHG*. G. vater, *Goth* –fadar (occquring only once), and cogn. with *OI* pitar—*toch* A. pacar, B. pacer, *Arm*. hayr. *Gk*. narnp L. pater, *OIr* athir, 'father'. All these words are traceable to pa. a child's word for 'father'. *Cp*. pater, 'father' *Cp*. also expatriate, impetrate, Jupiter,

padre, parricide, patriarch, patrician, patrimony, Potron, pattern, pere, perpetrate, repair, 'to resort', repatriate. Derivatives: father, tr. v., father—hood, n., father—land (q-v.) father—less, adj., father—ly. adj., father—li—ness, n.

—A Comprehensive Etymological Dictionary of the English Language: By Dr. Ernest Klein.

*mother* n, a female parent. —*ME.* moder, fr. *OE.* modor, rel. to *OS.* modar. *ON.* mooir, *Dan.*, Swed. moder. *OF ris.* moder, 'mother' Dr. moeder, OHG., MHG. MUOTER, G. Mutter, and cogn. with OI. matar—. *Toch.* A macar, B. macer, *Ann* mair (gen. maur) Gk. unrnp, *Dor.* uxrnp, 'mother' Alb. motre, 'sister' orig. 'the elder sister', i e., 'the sister replacing the mother', L. mater, *OIr*, mathir, *OSlav.* mati, Lett. mate, 'mother' *Lith.* mote, *OPruss.* muti. 'wife' All these words derive fro. I. E. *mater—, which is traceable to child's lip word ma—, Cp. mater, maternal, maternity, matrimony, matrix, matron, matter, metropolis, Demeter, meteronymic, maieutic, cummer.

Derivatives: mother, to care for as a mother, mother-hood. n, mother-less, mother-like, mother-ly. adjs, mother-li-ness, n.

—'A Comprehensive Etymological Dictionary of the English Language: by Dr. Ernest Klein:

இந்தைரோப்பிய மொழிகளில் father, mother என்னுஞ் சொற்கள், முறையே தந்தையையும், தாயையும், பச்சிளங் குழந்தைகள் பா, மா என்று அழைக்கும் விளிச் சொல்லிலிருந்து தோன்றியனவாகச் சொற்பிறப்பியல் வல்லுநர் கருதுகின்றனர். மேலையாரிய மொழிகளில் தாய் தந்தையரைக் குழந்தைகள் அழைக்கும் மா, பா (ma, pa) என்னும் விளிச்சொற்கள் அம்மா, அப்பா என்பவற்றின் திரிபன்றி வேறில்லை. வடமொழியில் பித்ரு, என்னுஞ்சொல் 'பா' (காத்தல்) என்னும் வேரிலிருந்து தோன்றிய தாகவும் மாத்ரு என்னுஞ்சொல் மா (உண்டாக்குதல், குழந்தை பெறுதல்) என்னும் வேரிலிருந்து தோன்றியதாகவும் கூறுகின் றனர். பித்ரு, மாத்ரு என்பன தாய் தந்தையை மட்டுமின்றிப் பாட்டன், முப்பாட்டன், முதியோர், முன்னோர்களையும் குறிப்ப தாய் வடமொழியில் வழங்குதலான் தளரும் முதுமை யெய்தி யோர் காத்தற்கும் உண்டாக்குதற்கும் உரியரன்மை புலப்படும்.

நாத்திருந்தாத இளங்குழந்தை, இதழ் கூட்டியே பெற்றோரை விளித்தலின் இதழில் பிறக்கும் அப்பா, அம்மா என்பன இயல் பான விளிகளாயின. குழந்தைகள் அப் பருவத்தில் தந்தையைக் காப்பவன் என்றும் தாயை உண்டாக்குபவள் என்றும் அறியா. அறிந்ததாக இட்டுரைப்பதும் பொருந்தாது.

அப்பன் என்னுந் தமிழ்ச்சொல் மேலையாரிய மொழிகளில் 'ab' என்றும், அம்மாள் என்னும் தமிழ்ச் சொல் சமற்கிருதத்தில் 'அம்பா' என்றும் திரிதலான் மாத்ரு, பித்ரு என்பவற்றின்மூலம் பாட்டன் பாட்டியைக் குறித்த அம்மாத்தாள், அப்பாத்தன் என்னும் கூட்டுச் சொற்கள் என்பதைத் தெளியலாம்.

மலையாளம், கன்னடம், தெலுங்கு, பார்சி மொழியாளருள் சில பிரிவாரிடைப் பாட்டனைக் குறித்த தாத்தா என்னுஞ் சொல் தந்தையைக் குறிப்பதாக வழங்குதலை ஒப்பிட்டு நோக்குக (D.E.D. 2580.)

அத்தன்—அத்தன்—அத்தத்தன் — அத்தாத்தான் — தாத் தன்—தாத்தா.

ம. அச்சச்சன்—பாட்டன்.

*SKt*. தாதா—பாட்டன்.

அப்பன் — அத்தன்—அப்பாத்தன். — பாத்தன் — பாட்டன் எனத் திரியுமா என ஐயுறுவோர்,

அது—அந்து—அத்து—அட்டு எனத் திரிவதை ஒப்பு நோக்குக.

பட. அத் கடெ—அந்தப் பக்கம்

துட. அட் போ(f)—அங்கு செல் அந்தப்பக்கம் போ.

தொண்டு கிழவி என்னும் பொருளில் பாட்டி என்னுஞ் சொல் பரிபாடலில் பயின்றுள்ளது.

மடநடை பாட்டியர் தப்பி (பரிபா. 10, 37). தொல்காப்பியத் தில் விலங்கினத்தில் பெண்பாலைக் குறித்தது (தொல். பொ. 690, 621), பாடன் மகளிர் பாட்டியர் எனப்பட்டனர்.

பாணன் வருக பாட்டியர் வருக (மதுரைக் 749). பன்னிரு பாட்டியலில் இச் சொல் பெற்றோரின் தாயைக் குறிக்கிறது. தொன்று தொட்டே இச் சொல்லாட்சி வழக்கிலிருந்ததை இவை வலியுறுத்துகின்றன.

———

## சென்னைப் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழா

# டாக்டர் ம. பொ. சிவஞானம் அவர்களின் பேருரை

மேதகு வேந்தர் அவர்களே! மாண்புமிகு இணை வேந்தர் அவர்களே! மதிப்பிற்குரிய துணைவேந்தர் அவர்களே! அவையில் குழுமியுள்ள அறிஞர் பெருமக்களே! அரிதின் முயன்று கல்வி பயின்று, பட்டங்களைப் பெற இங்கு வந்து குழுமி யிருக்கும் இளைய சமுதாயத்தினரே! உங்கள் அனைவருக்கும் என் பணிவான வணக்கங்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இன்றைய பட்டமளிப்பு விழாவிலே பேருரை நிகழ்த்த என்னை அழைத்திருப்பதானது, எனது வரலாற்றிலே மட்டு மல்லாது, பல்கலைக்கழக வரலாற்றிலேயும் புதுமையானதென்று யான் கருதுகின்றேன்.

கடந்த பட்டமளிப்பு விழாக்களில் பேருரை நிகழ்த்திய அறி ஞர்களிலிருந்து பல வகையிலே யான் வேறுபட்டவன். யான் கூறுவதன் பொருளை அறிஞர்கள் நிறைந்த இந்த அவைக்கு விளக்கத் தேவையில்லையென்று நினைக்கிறேன். உழைப்பாளி வர்க்கத்தில் தோன்றி, முறைசாரா முறையிலே சுயமுயற்சியால் கல்வி பயின்று, தமிழின் துணைகொண்டு மட்டுமே முன்னணிக்கு வந்த சாமானியனை என்னைப், பட்டமளிப்பு விழாப் பேருரை நிகழ்த்த அழைத்ததானது, இந்தப் பல்கலைக் கழகத்தார் தமி ழுக்குச் செய்த பெருமையென்று யான் கருதுகின்றேன். இந்த மாறுதலானது என்னிடமிருந்து தொடங்கினாலும், என்னோடு முடிந்துவிடாதென்று நம்புகின்றேன்; முடிந்துவிடக் கூடாதென் றும் விரும்புகின்றேன். எனக்கு இந்தப் பெருமை கிடைத்திருப்ப தற்கு, அண்மைக் காலமாகத் தமிழ்மொழிக்கு ஏற்பட்டு வரும் வாழ்வும் வளர்ச்சியுமே காரணங்கள் என்று நினைக்கின்றேன்.

இந்த நல்ல நேரத்திலே பல்கலைக் கழகத்தாரை வேண்டிக் கொள்கிறேன். இதன் நிர்வாகத்திலும், ஆட்சிக்குழு—பேர வைக்குழு—கல்விக்குழு ஆகியவற்றின் நடவடிக்கைகளிலும், தமிழே முதன்மொழியாக அமையவேண்டுமென்று மிகுந்த பணி வோடு கேட்டுக்கொள்கிறேன். ஏனெனில், இந்தப் பல்கலைக் கழகம் தமிழ்நாட்டு வரம்புக்குள்தான் இயங்குகின்றதல்லவா!

தமிழகம் தனியரசு மாநிலமான பின்னரும் மதுரை காம ராசர் பல்கலைக்கழகமும், கோவை வேளாண்மைப் பல்கலைக்

கழகமும், பேரறிஞர் அண்ணு தொழில் நுட்பப் பல்கலைக்கழகமும் இதிலிருந்து கிளைத்தன. இன்னும் பல பல்கலைக்கழகங்கள் கிளைக்கவிருக்கின்றன. இத்தனை மாறுதல்களுக்குப் பின்னும் சென்னைப் பல்கலைக்கழகம் தனது பெருமையிலே தலைதூக்கி நிற்க முடிகின்றது. தமிழ்மொழியானது, கன்னடத்தையும் களிதெலுங் கையும் கவின் மலையாளத்தையும் சேய்களாகப் பெற்ற பின்னரும், தனது சீரிளமை குன்ருது என்றும் கன்னியாக விளங்குகிறது என்று மனேன்மணீயம் சுந்தரனுர் வருணித்திருக்கிருர். அந்தத் தமிழ்மொழிக்கு நேரானது இந்தச் சென்னைப் பல்கலைக்கழகம். இந்தச் சிறப்புக்குத் தமிழகத்தின் தலைநகரத்தில் உள்ள பல்கலைக் கழகம் என்பதும் ஒரு காரணம். இந்தப் பெருமை இதற்கு இனியும் நீடிக்க வேண்டுமென்று வேண்டுகிறேன்.

அறிஞர் பெருமக்களே! நாடு அடிமைப்பட்டிருந்த காலத் திலேகூடத் தமிழினத்தாருக்குப் பெருமைதேடித் தரத்தக்க அறிஞர் பலரை இந்தப் பல்கலைக்கழகம் தோற்றுவித்திருக்கிறது.

முறைசாரா முறையில் சுயமாகக் கல்வி பயின்ற எளியே னுக்கும் கௌரவ டாக்டர் பட்டமளித்துக் கல்வியுலகிலே ஒரு புது மையையும் புரட்சியையும் தோற்றுவிப்பதற்கு என்னைக் கருவி யாகப் பயன்படுத்திக்கொண்ட பெருமையும் இந்தப் பல்கலைக் கழகத்துக்குத்தானே உண்டு. நான் இங்கே டாக்டர் பட்டம் பெற்ற அன்றே நன்றி தெரிவித்துப் பேசியிருக்க வேண்டும். ஆனல், பட்டமளிப்பு விழாவில் கடைப்பிடிக்கும் மரபு காரணமாக இந்த வாய்ப்பினை அன்று பெறவில்லை. கிடைத்த வாய்ப்பினைப் பயன்படுத்தி அன்று தெரிவித்திருக்க வேண்டிய நன்றியினை இன்று தெரிவித்துக்கொள்கிறேன்.

19ஆம் நூற்ருண்டில் சென்னை, பம்பாய், கல்கத்தா ஆகிய நகரங்களில் தோன்றிய பல்கலைக் கழகங்களில் இந்த நாட்டு மக்கள் மொழியிலோ, அவர்கள் கலாசாரப் பாரம்பரியத்தின் வழி யிலோ பாடங்களைப் போதிக்கும் முறை ஏற்கப்படவில்லை. பாட போதனை அன்னிய மொழியிலே, போதிக்கும் வழியும் ஐரோப்பிய வழியிலே; போதித்தவர்களும் பெரும்பாலும் அன்னியர்களே.

நாடு சுதந்திரம் பெற்றபின் அந்த விபத்திலிருந்து இந்திய சமுதாயம் விடுதலை பெறுமென்று நம்பப்பட்டது. மெக்காலே தந்த கல்வி முறையிலிருந்து விடுபட்டுத் தாய்மொழியின் வாயி லாகக் கல்வி பயிலும் தேசியக் கல்வித் திட்டம் இந்த நாடு விடுதலை பெற்ற நாள்தொட்டே நடைமுறைக்கு வரும் என்று நம்பப்பட்டது. அதற்காகச் சில பல முயற்சிகளும் எடுக்கப்

பட்டன என்பதை நான் மறந்துவிடவில்லை. ஆயினும் அவை யெல்லாம் எதிர்பார்த்த பலனைத் தராமல், அரைக்கிணறு தாண்டும் விபத்தாகவே முடிந்துவிட்டன.

அறிஞர் பெருமக்களே! உங்களை இரு கரமும் கூப்பி வேண்டி, ஒரு விண்ணப்பம் செய்துகொள்கிறேன். நாடு பெற்ற சுதந்திரத்தைச் சமுதாயத்தின் அடித்தளத்திலுள்ள மக்கள் தங்கள் சொந்தமொழியின் மூலம்தான் அனுபவிக்க முடியும். அதற்கு எனக்குத் தெரிந்த ஒரே வழி, கல்வித்துறையின் எல்லாக் கட்டங்களிலும் தமிழே—அதாவது, தாய்மொழியே போதனுமொழியாக அமையவேண்டும் என்பதுதான். உலகில் சுதந்திரமாக உள்ள ஒவ்வொரு நாட்டிலும் இது நடைமுறையில் இருக்கிறது. நம் நாட்டிலோ சுதந்திரம் பெற்ற 33 ஆண்டுகளுக்குப் பின்னும் கல்விக் கூடங்களிலே போதனு மொழியும் முழு அளவில் மாறவில்லை; போதிக்கும் வழியும் மாறவில்லை.

இதெல்லாம் ஒருபுறமிருக்க, ஆங்கில கான்வென்ட் பள்ளிகள் நாட்டில் பெருகிவருகின்றன. சென்னை நகரிலே கான்வென்ட் பள்ளி இல்லாத வீதியே இல்லையென்று சொல்லிவிடலாம். மூன்று வயது பச்சிளங் குழந்தையிடம் பெற்றோர்கள் ஆங்கிலத்தில்தான் பேசவேண்டும் என்னும் நிபந்தனையோடு இந்தப் பள்ளிகளில் குழந்தைகள் சேர்த்துக்கொள்ளப்படுகின்றன. இது தேவைதானு? நம்மோடு சேர்ந்து சுதந்திரம் பெற்ற பாகிஸ்தான், பர்மா, இலங்கை ஆகிய நாடுகளில் எல்லாம் ஆங்கில கான்வென்ட் பள்ளிகளுக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டுவிட்டது. இந்திய நாட்டிலேதான்—குறிப்பாக நம் தமிழ்நாட்டிலேதான் தமிழை அடியோடு புறக்கணிக்கும் ஆங்கில கான்வென்ட் பள்ளிகள் நாளுக்குநாள் பெருகி வளர்பிறை போல வளர்ந்து வருகின்றன. இந்தக் கல்வி முறையால் இன மாற்றமும், கலாசாரத்தில் தலைகீழான மாற்றமும் ஏற்படுத்தப்படுகின்றன.

இந்தக் கல்வி முறையானது சமத்துவமும், சமதர்மமும் கொண்ட ஒரு புதிய பாரதத்தைப் படைப்பதற்கு எதிரானது என்பதையும் சிந்தித்து இந்தக் கேட்டிற்கு உடனடியாகப் பரிகாரம் காண முயலவேண்டும். இந்த முயற்சியில் நம் கல்வியமைச்சர் ஈடுபட்டுவருவதையும் நான் காண்கிறேன். அதிலே அவர் வெற்றி பெறுவாராக.

இறுதியாக, இந்த விழாவிலே பட்டம் பெறுகின்ற இளஞ் சமுதாயத்தினருக்குச் சில கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன்.

இன்று, அறிஞர்கள் நிறைந்த இம்மாமன்றத்திலே பல்வேறு கலைகளுக்கான பட்டங்கள் பெறுகின்ற பாக்கியசாலிகளாகிய உங்கள் ஒவ்வொருவருக்கும் என் மனமார்ந்த வாழ்த்துகளைக் கூறுகின்றேன். உங்களுடைய எதிர்காலம் எல்லாவகையிலும் சிறந்து விளங்கவும் நீங்கள் எந்தக் கலைக்காகப் பட்டம் பெறுகிறீர்களோ, அந்தக் கலையில் உங்கள் திறமை மேலும் வளரவும், அதன்மூலம் இந்திய சமுதாயத்துக்கும், உலகத்திற்கும் நீங்கள் தொண்டு புரியவும் அருளுமாறு இறைவனை வேண்டுகின்றேன்.

முதலில் நான் உங்களை வேண்டுவது, நீங்கள் கற்ற கலையைக்கொண்டு, சுயபலத்தில் வாழ்க்கையைத் தொடங்க முயலுங்கள். அரசாங்க அலுவலகங்களிலே அடைபடுவதொன்றையே ஆசையாக்கிக் கொள்ளாதீர்கள். உங்களிலே மருத்துவக் கலையிலே பயின்று பட்டம் பெறுபவர்கள் தொடக்க காலத்திலேனும் கிராமங்களில் பணியாற்றுவதை ஒரு புனிதக் கடமையாகக் கருதுவது நல்லது.

உங்களில் சட்டம் பயின்று, பட்டம் பெறுவோர் அதனை வருவாய்க்குரிய ஒரு தொழிலாக மட்டும் கருதாமல், வாயிருந்தும் ஊமைகளாயிருக்கும் மக்களுக்காகப் பேசுவதை ஒரு புனிதக் கடமையாகக் கருதுங்கள். நான் இங்குப் பெயர்சொல்லிக் குறிப்பிட்ட கலைகளுக்காக மட்டுமல்லாமல் வேறு வேறு துறைகளில் பட்டம் பெற்றவர்களையும் வேண்டுகிறேன். அக் கலைகளிலே மேலும் மேலும் திறமையை வளர்த்துக்கொள்ள முயலுங்கள்.

உங்கள் எல்லோருக்குமாகச் சொல்கிறேன். இந்தத் தமிழகமானது நீங்கள் பிறந்த தொட்டிலாக இருக்கலாம்; அதனால் நீங்கள் அந்தத் தொட்டிலிலேயே தவழ்ந்துகொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. இந்தியப் பெருநாடு நீங்கள் ஓடி உலாவும் பூங்காவாக விளங்கட்டும். உலகம் முழுவதும் உங்களுடைய பணியை எதிர்பார்க்கிறது. ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்று பூங்குன்றனார் சொன்ன மந்திரத்தை மறவாமல் இந்தியப் பெருநாடு முழுவதையும்—ஏன்? உலகம் முழுவதையும் உங்களுக்குச் சொந்தமாக்கிக் கொள்ளுங்கள்.

''படித்தவர்களிடையே வேலையில்லாத் திண்டாட்டம்'' என்னும் சொற்றொடர் சமுதாயத்திலிருந்தே மறையவேண்டும். படித்துப் பட்டம் பெற்று வேலை இல்லாமல் திண்டாடும் கூட்டத்திலே சேர்ந்துவிட அல்ல நீங்கள் இன்று பட்டம் பெறுவது. உங்களைப் பட்டப் படிப்பிலே ஈடுபடுத்தியவர்களுக்கு அந்தப்

பட்டத்துக்கு ஏற்ற எதிர்காலத்தை வழங்கும் கடமையும் இருக்கிறது.

இன்று பட்டம் பெறுகிற நீங்கள் எல்லாம் இளைய சமுதாயத்தினர். அதனால் உங்களை வரவேற்று வாழ்வளிக்க, நவ பாரதம்—புதிய தமிழகம் காத்துக்கிடக்கிறது.

எனக்கு இந்த அரிய பணியை அளித்து என்னைப் பெருமைப் படுத்திய சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு மீண்டும் ஒருமுறை மனப்பூர்வமான நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

———

## பாவாணர்தம் பிரிவால்...

[புலவர் க. சு. நக்கீரதாசன். எம். ஏ, கள்ளிப்பட்டி.]

கோடும் புள்ளியுமாய்க் கோலமதைப் போட்டுவைத்த
　　காலமகள் கோலத்தைக் காலனவன் அழித்தானே
கூடும் மாநாட்டுக் கோலம் கலையு முன்னே
　　கூடல் நகர் தன்னில் கூடாக்கி மகிழ்ந்தானே
பாடும் குயிலோசைப் பாட்டமுதம் இனிக்கவில்லை
　　பாலும் சுவைக்கவில்லை பாவாணர் தம்பிரிவால்
நாடும் மொழியுணர்வில் நல்லாய்வு மனப்போக்கில்
　　நாட்டில் உன்னைப்போல் நாங்களினிக் காண்பதுண்டோ?

சொல்லும் சொற்பொருளின் சுரங்கத் துட்சென்று
　　சொந்த மொழியினுக்கே சுகமூட்டி வாழ்ந்தனையே
அல்லும் பகலுமாய் அயரா தாய்ந்தாய்ந்து
　　ஆவி தமிழுக்கே அன்பாய் ஈந்தனையே
இல்லை உனக்குநிகர் இனியும் பிறப்பதில்லை
　　இனிய தமிழ்வேந்தே எங்கள் ஒளிவிளக்கே
வில்லும் கயல்புலியும் வியாத் தமிழ்நாடும்
　　விம்மி அழுகிறதே விழியாறு பாய்கிறதே.

# பேராசிரியை கிருஷ்ணா சஞ்சீவி மறைவு

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களின் துணைவியாரும், இராணிமேரிக் கல்லூரித் துணைத் தமிழ்ப் பேராசிரியரும், சிறந்த பேச்சாளரும் எழுத்தாளருமான பேராசிரியை டாக்டர் திருமதி கிருஷ்ணா சஞ்சீவி அவர்கள் 12—12—81இல் தமது 54ஆம் அகவையில் இறையடி சேர்ந்தார்கள் என்ற செய்தியறிந்து ஆற்ருெணுத் துயரெய்துகின்ருேம்.



திருமதி சஞ்சீவி அவர்கள் திருச்சியில் கே. எம். வி. இராஜா என்பவரின் திருமகளாக 1928இல் தோன்றியவர். இவர் டாக்டர் சஞ்சீவி அவர்களைக் காதலித்துத் திருமணம் செய்துகொண்டவர். இவர்கள் திருமணம் கலப்புத் திருமணம் என்பது குறிப்பிடத்தக்கது. அம்மையார் கணிதத்தில் பி.ஏ., பட்டமும், தமிழில் எம்.ஏ., பட்டமும், பி.டி., பட்டமும் பெற்றவர். 1979இல் 'பழந்தமிழ் நூல்களில் ஒப்புமைப் பகுதிகள்' என்னும் பொருள்பற்றி ஆய்வு செய்து டாக்டர் பட்டமும் பெற்ருர். இவர் தனித்தும் தம் கணவருடன் கூடியும் ஏராளமான ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதியுள்ளார். மொழி பெயர்ப்பு செய்வதிலும் வல்லவராயிருந்தார்.

மேலும் அம்மையார் சிறந்த பேச்சாளராகவும் திகழ்ந்தார். 1975இல் சென்னைப் பல்கலைக் கழகத்தில் சாதி எதிர்ப்பு—ஒழிப்பு பற்றி இவர்கள் ஆற்றிய சொற்பொழிவு குறிப்பிடத்தக்கது. திருச்சி மாவட்டக் கழகப் பள்ளியில் ஆசிரியப்பணி தொடங்கிய இவர்கள், படிப்படியாக உயர்ந்து மேரி இராணிக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியர் பதவி வரை உயர்ந்தார். தமிழ்நாடு மட்டுமன்றி வடநாட்டில் பல ஊர்களிலும் கல்விப் பயணம் செய்து பட்டறிவு கைவரப்பெற்றவர்.

அம்மையார் அவர்களும் அவர்தம் கணவர் டாக்டர் சஞ்சீவி அவர்களும் நம் கழகத்திடமும் கழக ஆட்சியரிடமும் மிகுந்த பற்றுடையவர்கள். இவ்விருவரும் செந்தமிழ்ச் செல்வியில் அவ்வப்போது அரிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதி வந்தமை குறிப்பிடத்தக்கது.

இங்ஙனம் பல்லாற்ருனும் தகுதியும் சிறப்பும் பெற்ற டாக்டர் திருமதி கிருஷ்ணா சஞ்சீவியின் மறைவு தமிழ் உலகிற்கும், குறிப்பாக மகளிர் உலகிற்கும் பெருத்த நட்டமேயாகும். வாழ்வாங்கு வாழ்ந்த துணைவியாரை இழந்து வாழ நேர்ந்த டாக்டர் சஞ்சீவி அவர்களின் நிலை குறித்து வருந்துவதோடு, அவருக்கும் அவர்தம் ஒரே மகளான செல்விக்கும் உற்ருர் உறவினர்க்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேம்.

———

# செய்திகளும் குறிப்புகளும்

## சென்னைத் தமிழிசைச் சங்கம் முப்பத்து ஒன்பதாம் விழா

சென்னைத் தமிழிசைச் சங்கத்தின் 39ஆம் விழா ராஜா அண்ணாமலை மன்றத்தில் 21–12–81 அன்று துவங்கிற்று. டாக்டர் நீதிபதி மகராசன் அவர்கள் வரவேற்புரை ஆற்றினார். மாண்புமிகு மின் துறை அமைச்சர் எஸ். இராமச் சந்திரன் அவர்கள் தொடக்கவுரை ஆற்றினார். டாக்டர் எஸ். இராமநாதன் தலைமை உரை நிகழ்த்தினார். பேராசிரியர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள் நன்றி நவில முதலாம் நாள் விழா இனிது நிறைவேறிற்று.

22–12–81 அன்று பண் ஆராய்ச்சியின் 32 ஆவது கூட்டம் டாக்டர் எஸ். இராமநாதன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திரு மீ. ப. சோமசுந்தரம் (சோமு) அவர்கள் அனைவரையும் வரவேற்று உரை நிகழ்த்தினார். திரு. பித்துக்குளி முருகதாசு அவர்கள் தொடக்கவுரையாற்றினார்.

25–12–81 இல் நடைபெற்ற பண்ணாராய்ச்சி நிறைவுக் கூட்டத்தில் தமிழிசைக் காவலர் பத்மபூஷன் தமிழிசைச் சங்கத் துணைத் தலைவர் டாக்டர் இராசா சர். முத்தைய செட்டியாரவர்கள் சுந்தர ஓதுவா மூர்த்திகள் நினைவு மலரினையும், டாக்டர் எஸ் இராமநாதன் அவர்களின் "சிலப்பதிகாரத்தில் இசை" என்னும் இரு நூல்களையும் வெளியிட்டு, அனைவருக்கும் நன்றி கூறினார்.

## பெங்களூர் தமிழ்ச் சங்கத்தில் பாரதியார் நூற்றாண்டு விழா

11–12–81 அன்று பெங்களூர் தமிழ்ச் சங்கச் சார்பில் திருவள்ளுவர் அரங்கில் டாக்டர் மாஸ்தி வெங்கடேச ஐயங்கார் அவர்கள தலைமையில் கர்நாடக முதலமைச்சர் மாண்புமிகு ஆர். குண்டுராவ் அவர்கள் பாரதியார் நூற்றாண்டு விழாவைத் தொடங்கி வைத்து உரையாற்றினர். அத்துடன் பாரதியார் கவிதைகளின் கன்னட மொழி பெயர்ப்பு நூலினையும் வெளியிட்டனர். திரு. டி. பாலகோபாலன், டாக்டர் மெ. சுந்தரம், பி. யோகிஸ்வரன் ஆகியோர் சிறப்புரையாற்றினர்.

## சேலத்தில் புத்தகக் கண் காட்சி திறப்பு விழா

சேலம் அரிமா சங்கம், விஜயாபுக் ஹவுஸ் ஆகியவற்றின் சார்பில் 15–12–81 அன்று சேலம் விஜயராகவாச்சாரியார் நினைவு மன்றத்தில் புத்தகக் கண்காட்சித் திறப்பு விழா நடைபெற்றது. சேலம் மாவட்ட ஆட்சித் தலைவர் சு. ர. கருப்பண்ணன், இ. ஆ. ப. அவர்கள் தலைமை தாங்கினார். மாண்புமிகு க. இராசாராம் அவர்கள் கண்காட்சியைத் திறந்து வைத்தார். திரு. ம. சாம்பசிவம், அவர்கள் விற்பனையைத் துவக்கி வைத்தார். திரு. அ. இலக்குமணன் முதல் நூலைப் பெற்றுக்கொண்டார்.

## புதுக்கோட்டை இந்து சமய மாநாடு

திசம்பர் 11, 12, 13 ஆம் நாள்களில், புதுக்கோட்டை டவுன் ஹால், செந்தமிழ்ப் பந்தலில், நான்மறை அரங்கில் இந்து சமய மாநாடு நடைபெற்றது. முதல் நாள் தவத்திரு குன்றக்குடி அடிகளார் தலைமைதாங்க ராணி ரமா தேவியார் வரவேற்புரை நிகழ்த்த, திரு. வி. என். சிதம்பரம் அவர்கள் துவக்கவுரை ஆற்றினர். மற்றும் அறிஞர் பலர் சிறப்புரை ஆற்றினர்.

12 ஆம் நாள் நிகழ்ச்சிக்குத் திருப்பெருந்திரு ஞானப் பிரகாச தேசிக பரமாச்சார்ய சுவாமிகள் தலைமை தாங்கினர். திரு. ஆர். இராசகோபால ஐயங்கார் வரவேற்புரை நிகழ்த்தினர். திரு. பக்கிரிசாமி அவர்கள் துவக்க உரை ஆற்றினர். சிதம்பரம் மௌன தேசிகர் ஆதினம் சீலத் திரு மௌன சபாபதி சுவாமிகள் ஆசியுரை நிகழ்த்தினர். மௌன சுந்தர மூர்த்தி சுவாமிகள் வாழ்த்துரை வழங்கினர். அன்று மாலை சமயதத்துவ விழாவும், இசையரங்கு, கூட்டு வழிபாடு முதலியனவும் நடைபெற்றன. சீலத்திரு சாந்தலிங்க அடிகளார் துவக்கவுரை ஆற்றினர். சீலத்திரு சுந்தர சுவாமிகள் தலைமை தாங்கினர். முன்னதாகப் பேராசிரியர் கு. ப. கண்ணன் வரவேற்புரை நிகழ்த்தினர். திரு. A. T. A. ஈஸ்வர் A. M N. F. S. C., A. F. I. C. D. (Lon.) A. R. S. H. (Lon.) அவர்கள் உட்பட அறிஞர் பலர் சிறப்புரை ஆற்றினர்.

13—12—81 இல் தருமபுரம் ஆதீனம் சீலத்திரு, சண்முக தேசிக ஞான சம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் தலைமையில் அறிஞர் பலர் சமயப் பேருரை ஆற்றினர். சென்னை சைவப் பிரசங்க மணி திரு. A. T. A. ஈஸ்வர் அவர்கள் 'பெரிய புராணப் பெண்டிர்' என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவாற்றனர்.

## திருப்பாவை-திருவெம்பாவை இசைப்பள்ளி ௨௮ ஆவது ஆண்டு துவக்க விழா

மதுரை திருப்பாவை—திருவெம்பாவை 28 ஆவது ஆண்டு துவக்க விழா 16—12—81 அன்று மாலை, தானப்பமுதலித் தெருவிலுள்ள மங்கள நிவாஸ் கட்டிடத்தில் திரு. எஸ். கோபாலகிருட்டிணன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திரு. E. P. மாரியப்பன் துவக்க உரை ஆற்றினர். திரு. ஆர். அரங்கசாமி பாவை வகுப்பைத் துவக்கி வைத்தார்.

## உலகக் கிறித்தவத் தமிழ் மாநாடு

உலகக் கிறித்தவத் தமிழ்ப் பேரவையின் சார்பில் திசம்பர் 28, 29, 30 ஆம் நாள்களில், திருச்சிராப்பள்ளி பிஷப்ஹீபர் கல்லூரியில் அமைக்கப்பட்டுள்ள கிறிஸ்தரசர் முத்தமிழ்ப் பேரரங்கில் உலகக் கிறித்தவத் தமிழ் மாநாடு நடைபெற்றது.

28—12—81 நிகழ்ச்சிகட்கு மேதகு பேராயர் டாக்டர் சாலமோன் துரைசாமி அவர்கள் தலைமை தாங்கினர். பிஷப்ஹீபர் கல்லூரி முதல்வர் பேராசிரியர் தே. சுவாமிராஜ் அவர்கள் வரவேற்புரை

நிகழ்த்தினர். முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் தொடக்க உரை ஆற்றினர். தவத்திரு குன்றக்குடி அடிகளார் மாநாட்டினைத் திறந்துவைத்து உரையாற்றினர். தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம் வாழ்த்துரை வழங்கினர். பேராசிரியர் ரம்போலா மாஸ்கரேனஸ், திருச்சி வானொலி நிலைய இயக்குநர் திரு, எம். சிவப்பிரகாசம் ஆகியோர் சிறப்புரை ஆற்றினர்.

29—12—81இல், தரங்கைப் பேராயர் ஜே. ஜெயசீலன் அவர்கள் தலைமையில் வில்லுப்பாட்டு, கருத்தரங்கு முதலியன நடைபெற்றன. அறிஞர் பலர் சிறப்புரை ஆற்றினர். டாக்டர் சி. பாலசுப்பிரமணியம் அவர்களை நடுவராகக் கொண்டு பட்டிமண்டபமும் நடைபெற்றது.

30—12—81இல் பேராயர் தாமஸ்பெர்னாண்டோ அவர்கள் தலைமையில் பட்டமளிப்பு விழா நடைபெற்றது. மூன்னாள் உயர்நீதி மன்ற நடுவர் மு. மு. இஸ்மாயில் அவர்கள் பட்டமளிப்புரை ஆற்றினர். இவ்விழாக்களையொட்டி நூல் வெளியீடு, கவியரங்கம், நாடகம் முதலிய நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

## பெரியார் நூற்றாண்டு நினைவுத் தூண் திறப்புவிழா

பெரியார் நூற்றாண்டு நினைவுத் தூண் திறப்புவிழா 24—12—81 அன்று மாலை ஈரோடு பேருந்து நிலையத்துக்கு அருகில் நடைபெற்றது. போக்குவரத்துத்துறை அமைச்சர் மாண்புமிகு சு. முத்துசாமி விழாவிற்குத் தலைமை தாங்கினர். நிதியமைச்சர் மாண்புமிகு டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் நினைவுத் தூணைத் திறந்துவைத்தார். மற்றும் அறிஞர் பெருமக்களும், நாடாளுமன்ற சட்டமன்றப் பேரவை, மேலவை உறுப்பினர்களும் சிறப்புரையாற்றினர்.

## டாக்டர் சாலினி இளந்திரையன் கல்லூரி முதல்வரானர்

தமிழ்ப் பேராசிரியரும், சாலை இளந்திரையன் அவர்களின் துணைவியாருமாகிய சாலினி இளந்திரையன் அவர்கள், புதுதில்லியிலுள்ள திருவேங்கடவன் கல்லூரியின் முதல்வராக 9—12—81இல் பதவியேற்றார். 65க்கு மேற்பட்ட கல்லூரிகளைக் கொண்ட தில்லிப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைப் பேராசிரியர் ஒருவர் கல்லூரி முதல்வர் பதவியை ஏற்பது இதுவே முதல்தடவையாகும். கல்லூரித் தலைமைப் பொறுப்பினை ஏற்றுள்ள பேராசிரியர் அவர்கட்கு எமது வாழ்த்துகள் உரித்தாகட்டும்.

## பண்டிதமணி கதிரேசச் செட்டியார் நூற்றாண்டுவிழா

செந்தமிழ் நெறியும் சிவ நெறியும் செழித்தோங்கச் சீரிய தொண்டு புரிந்த முதுபெரும் புலவர், பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்களின் நூற்றாண்டு விழாவினை 20—12—81 அன்று குன்றக்குடி ஆதீனம், ஆதீனக் கொலுமண்டபத்தில் மிகச் சிறப்பாகக் கொண்டாடிற்று. திரு. கதி. தியாகராசன் அவர்கள் வரவேற்புரையாற்றினர். மதுரை காமராசர் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினர். செட்டிநாட்டரசர்

டாக்டர் இராசா சர் முத்தையா செட்டியார் அவர்கள் பண்டிதமணியின் திருவுருவப் படத்தினைத் திறந்துவைத்தார். டாக்டர் தமிழண்ணல் திரு. வி. என். சிதம்பரம் ஆகியோர் சிறப்புரை ஆற்றினர். தவத்திரு. குன்றக்குடி அடிகளார் வாழ்த்துரை வழங்கினர். கவியரங்கிற்கு டாக்டர் திரு. அர. சிங்காரவடிவேலன் தலைமை தாங்கினர். கவிஞர் பலர் கவியரங்கேற்றினர். தவத்திரு குன்றக்குடி அடிகளார் தலைமையில் கருத்தரங்கம் நடைபெற்றது. 'பண்டிதமணியின் படைப்புகள்' என்னும் பொருள் பற்றித் தமிழறிஞர் ஐவர் பல்வேறு தலைப்புகளில் உரையாற்றினர். திரு. நா. அருணசலன் அவர்கள் நன்றி நவில விழா இனிது முடிந்தது.

## திருவிளையாடல் புராணச் சொற்பொழிவு

பல்லாவரம் சாவடித் தெருவிலுள்ள மறைமலையடிகள் கலை மன்றத்தில் 31—1—82 அன்று மாலை திருவிளையாடல் புராணத் தொடர் சொற்பொழிவின் துவக்க உரையினைத் தவத்திரு. சொ. இரா. தேமொழியார் ஆற்ற, சைவப் பிரசங்கமணி திரு. A. T. A. ஈஸ்வர், A N.M.F.S.C., A.F I.C D. (Lon.) A R.S.H. (Lon.) அவர்கள் திருவிளையாடல் புராணச் சொற்பொழிவினை நிகழ்த்துவார். ஞாயிறு தோறும் இச் சொற்பொழிவு நடைபெறும்.

## பேராசிரியர் பூ. ஆலால சுந்தரனர் மறைவு

தாம்பரம் கிறித்தவக் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவராக விருந்து ஓய்வுபெற்ற பேராசிரியர் பூ. ஆலால சுந்தரம் செட்டியாரவர்கள் 9—1—'82இல் திருவாதிரையன்று தில்லைப் பெருமானைக் கண்டு வணங்கச் சென்றிருந்த காலை, திடுமென ஏற்பட்ட மார்படைப்பு நோயினல் தில்லைப்பெருமான் திருவடி சேர்ந்தார் என்ற செய்தியறிந்து ஆற்றெணுத் துயரெய்துகிறோம். பேராசிரியர் அவர்கள் நம் கழகத்திடமும் ஆட்சியாளரிடமும் பற்றும் தொடர்பும் கொண்டவர். மறைந்த பேராசிரியரின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## தமிழ்த் தென்றல் திரு. வி. க. நூற்றுண்டுவிழா

தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்கட்கு 23—8—82இல் நூற்றுண்டு விழா தொடங்கி 23—8—83இல் முடிகிறது. இதுபற்றிய ஆய்வுக் கூட்டம் 9—1—82 அன்று சென்னை, மண்ணடி பவழக்காரத் தெருவிலுள்ள ஏ. ஆர். சி. பள்ளியில் நக்கீரர் கழகச் சார்பில் திருமதி கே. சகுந்தலா அம்மையார் அவர்கள் தலைமையில் கூடி இவ் விழாபற்றிய ஆய்வுகள் செய்தது.

## முகவரி மாற்றம்

"தமிழ் எழுத்துச் சீர்திருத்தப் புரட்சி" என்னும் நூலினை வெளியிட்ட பதிப்பகத்தின் முகவரியில் கீழ்க்காணும் மாற்றம் செய்யப்பட்டுள்ளது என அந் நூலின் ஆசிரியர் அறிவிக்கிருர் :

சேது அம்மாள் பதிப்பகம்,
10, பைக்கிராப்ட்சு சாலை, இரண்டாவது தெரு,
இராயப்பேட்டை, சென்னை-14.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-நுசூ, கசூகஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10-00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5-00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5-00 |

---

# மதிப்புரை

## பாரதியாரும் தமிழ்ப் புலவர்களும்

[ஆசிரியர்: பெ. சு. மணி. பூங்கொடி பதிப்பகம், 14. சித்திரைக் குளம், மேற்கு வீதி, மயிலாப்பூர், சென்னை—600004. பக்கம்: 212. விலை: ரூ. 10-00.]

நூலாசிரியர் பெ. சு. மணி அவர்கள் அடரா உழைப்பாளர்: அரும் பணி செய்பவர்; தாம் மேற்கொண்டுள்ள ஆய்வுப் பணியில் அழுந்தி நின்று அரு மணிகளைத் தொகுத்தளித்து, உலகின்புறக் கண்டு தாமுங் களிப்பவர்; காலத்தால் படைத்துள்ள அவர்தம் உயர்ந்த படைப்பு இந் நூலாகும்.

அரிய தொகுப்பும் உரிய முறை வைப்பும் கொண்டு இயல்கின்றது நூல். சிக்கல் இல்லாமல் தம் ஆய்வைச் செலுத்தி நிலைபெறுத்துகிறார் ஆசிரியர்; பாரதியார்க்கு முன் தமிழ்ப் புலவர்கள் நிலைமை, பாரதியார் அளித்த திருப்பம், பாரதி போற்றிய தமிழ்ப் புலவர் மரபு, பேராசிரியர் சுந்தரனாரும் பாரதியாரும், முனைவர் உ. வே. சாமிநாதரும் பாரதியாரும், தமிழ்ப் புலவர்களிடம் பாரதியார் எதிர் பார்த்தது, பாரதியார் பாட்டுப் போட்டியில் கலந்துகொண்டது, சுதேச கீதங்களின்மேல் அரசு விதித்த தடை ஆகியவற்றை முறைபெ ஆய்ந்து முடிவு செய்கிறார். இவ்வாராயச்சிக்குத் துணையாம் பிற்சேர்க்கைகள் மூன்றனை இணைத்துள்ளார்.

எடுத்துக் கொண்டுள்ள செய்திகளின் இடையே மு. ரா. கந்தசாமிக் கவிராயர், அரசஞ்சண்முகனார், சே. ரா. சுப்பிரமனிய கவிராயர், மறைமலையடிகள், பாரதிதாசன், வ. உ. சி, மு. இராகவனார், திரு. வி. க. முதலிய பெரும் புலவர்களுக்கும், பாரதியார்க்கும் இருந்த தொடர்பினையும், கருத்துரிமைகளையும் செவ்விதின் ஆசிரியர் விளக்கியுள்ளார்.

இந் நூலில் சுட்டப் பெறும் கருத்துகளுள் சில ஆய்வுக்குரியன. கருத்து முரண்பாட்டுக்கு இடந்தருவன.

அறிஞர் கால்டுவெல், போப் முதலிய சமயப் பரப்பாளர் ஆய்வினை, “இந்து மத ஒற்றுமையை ஊடுருவித் தாக்க ஒரு படைக்கலன் அமைத்துக் கொடுத்ததாகவும் (33) ‘உள்நோக்கம் கலந்த அணுகுமுறை’ உடையதாகவும் (32) ஆசிரியர் சுட்டுகிறார். அம் முடிவுக்கு அறிஞர் சிலர்

எழுத்துச் சான்றுகளையும் இயைக்கிறார். ஆனால், இந்து மத ஒற்றுமையை வலுவுறுவித் தாக்குதற்கும், இந்தத் தமிழர்களைப் பிராமணர்களிடமிருந்து பிரிப்பதற்கும் கிறித்துவக் குருவர்கள் ஒப்பிலக்கணம் யாத்தலும், அகர முதலி தொகுத்தலும், பாவிகம் இயற்றலும், திருவாசகம் திருக்குறள் முதலிய நூல்களை மொழி பெயர்த்தலும் ஆகிய செயற்கரும் செம்பணிகளை ஏற்று இடருற்றிருக்க வேண்டுவது இல்லை. மிக எண்மையான வழிகளிலேயே அதனைச் செய்திருக்கலாம். இணையற்ற அவர்களின் அறிவாக்கத் தொண்டுகளை இவ்வளவு சுளுவில் தள்ளி விடுதல் சாலாது.

இனிக், ''கால்டுவெல் அமைத்துத் தந்த பாதையிலே நடை போட்ட சுந்தரம் பிள்ளை தமிழ்த்தாய் வாழ்த்துப் பாவில் 'ஆரியம் போல் உலக வழக்கு அழிந்து ஒழிந்து' எனும் வசைச்சொற்களையும் பெய்தார்'' என்று 'வாழ்த்தில் வசை' என்னும் முரண் தெளிவாகுமாறு அழுத்தம் பெய்து ஆசிரியர் வரைந்துள்ளார் (34).

ஆசிரியரவர்கள், உலகியல் வழக்கு செய்யுள் வழக்கு என்னும் இருவகை வழக்கும் மொழிக்குரியன என்பதை நன்கறிவர். இவற்றுள், ஆரிய மொழி உலக வழக்கு அழிந்து ஒழிந்த ஒன்றனையே பேராசிரியர் சுட்டினரே அன்றி, அதன் செய்யுள் வழக்கைச் செப்பினார் அல்லர். அவர் கருத்து அஃதாயின் ''ஆரியம் போல் அழிந் தொழிந்து'' என்றே பாடியிருப்பார். ஆரியம், உலக வழக்கு ஒழிந்ததா உள்ளதா என்பது ஆசிரியர் உண்மை நெஞ்சுக்குத் தெள்ளிதிற் புலப்படக் கூடியதே.

வட மொழித் தாக்கக் கொடுமையையும் அதன் விளைவையும் நன்கு அறிந்து குறிக்கத் தவறாத ஆசிரியர், ''பேராசிரியர் சுந்தரம் பிள்ளை சமஸ்கிருதத்தின்மீது வெறுப்பை நெருப்பெனக் கொட்ட'' என்கிறார். இஃது ''அடித்ததில் குற்றமில்லை; அழுததே குற்றம்'' என்னும் பழமொழி ஒத்ததாம்.

வடவைத் தீயெனக் கான்று எறிந்து இன்றும் ஆறுமல் கனன்று கொண்டிருக்கும் வட மொழித் தாக்கத்தின் விளைவே, 'தமிழர், தம் தாய் மொழி வழியாம் வழிபாட்டு உரிமையையும் இழந்து மீளாத மொழியடிமைக்கு முறை காட்டி வைத்துள்ளது' என்பதை எவரும் எளிதில் அறிவர். இதனை நினைந்து நினைந்து நெஞ்சழன்ற பேராசிரியர் சுந்தரனார் நெருப்பைக் கொட்டினார் எனின், 'தமிழாக்கச் சமையலுக்காக, மொழியாக்கப் புத்தமைப்பு அடுப்பில், தம் கூரிய சீரிய அறிவு நெருப்பைக் கொட்டி அடுதொழில் மேற்கொண்டார்' என்பதே தகும். பிறவும் விரிப்பின் அகலுமென அமைவாம்.

எண்ணமும் வனப்பும் வார்ப்பும் வயங்க அமைந்துள்ள இவ் வரிய ஆராய்ச்சி நூலுள், பக்கந் தவறாமல் அமைந்துள்ள அச்சுப் பிழைகளை அடுத்த பதிப்பில் அறவே களையின் நூல் நனி சிறக்கும். ஆசிரியரின் உலையா முயற்சியும், உயர் படைப்பும் வாழ்க.

—இரா. இளங்குமரன்.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
60, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.

அப்பர் அச்சகம், சென்னை-1.